# வைதிக தர்ம வர்த்தனீ



ஆசிரியர் :

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

மலர் 13
இதழ் 8

சார்வரிஸூ
வைகாசிமீ

சார்வரிஸு வைகாசிமீ வஸந்தருது. உத்தராயணம்.

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஸ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | சனி | சது. | 39-07 | மூல. | 18-00 | சி. | — |
| 2 | 15 | ஞா. | பஞ். | 31-46 | பூரா. | 12-15 | சி.அ. | — |
| 3 | 16 | திங். | ஷஷ்ட். | 25-36 | உத்தி. | 7-37 | ம.அ. | ஷஷ்ட் |
| 4 | 17 | செவ். | ஸப். | 20-50 | சிர. | 4-20 | சி. | ச.அ. |
| 5 | 18 | புதன் | அஷ். | 17-33 | அவி. | 2-30 | சி. | நவ. |
| 6 | 19 | வியா. | நவ. | 15-50 | சத. | 2-15 | ம.சி. | தச. |
| 7 | 20 | வெள் | தச. | 15-32 | பூரட். | 3-22 | சி. | ஏகா. |
| 8 | மேமீ 21 | சனி | ஏகா. | 16-30 | உத்ர. | 5-47 | சி. | த்வா. |
| 9 | 22 | ஞா. | த்வா. | 18-40 | ரேவ. | 9-23 | அ.சி. | த்ர. |
| 10 | 23 | திங் | த்ர. | 21-45 | அசு. | 11-58 | சி. | — |
| 11 | 24 | செவ். | சதி. | 25-43 | பர. | 19-20 | சி. | சதி. |
| 12 | 25 | புதன் ● | அமா. | 30-25 | க்ருத். | 25-28 | அ.சி | அமா |
| 13 | 26 | வியா. | ப்ர. | 35-43 | ரோ. | 32-10 | ம. | ப்ர. |
| 14 | 27 | வெள். | த்வி. | 41-30 | மிருக. | 39-23 | சி. | த்வி. |
| 15 | 1960ஞு 28 | சனி | த்ரி. | 47-35 | திரு. | 46-50 | சி. | த்ரி. |
| 16 | 29 | ஞா. | சது. | 53-43 | புன. | 54-20 | சி. | சது. |
| 17 | 30 | திங். | பஞ். | 59-28 | பூச. | 60-00 | சி. | பஞ். |
| 18 | 31 | செவ். | ஷஷ்ட். | 60-00 | ,, | 1-33 | சி. | ஷஷ்ட் |
| 19 | 1 | புதன் | ,, | 4-25 | ஆயி. | 7-55 | சி. | சப். |
| 20 | 2 | வியா. | ஸப். | 8-07 | மகம் | 13-05 | அ.சி. | அஷ் |
| 21 | 3 | வெள். | அஷ் | 10-10 | பூரம் | 16-35 | சி. | நவ. |
| 22 | 4 | சனி | நவ. | 10-10 | உத். | 18-05 | ம. | தச. |
| 23 | ஜூன்மீ 5 | ஞா. | தசமி | 8-05 | ஹஸ். | 17-32 | அ.சி. | ஏகா. |
| 24 | 6 | திங். | ஏகா.<br>த்வா. | 3-57<br>57-55 | சித். | 14-58 | அ. | த்வா. |
| 25 | 7 | செவ் | த்ர. | 50-15 | சுவா. | 10-32 | சி. ம. | த்ர. |
| 26 | 8 | புதன் ○ | சதி. | 41-27 | விசா.<br>அனு. | 4-35<br>57-35 | சி. | சதி. |
| 27 | 9 | வியா. | பௌ. | 31-52 | கேட். | 50-00 | சி. | பௌ |
| 28 | 10 | வெள். | ப்ர. | 22-03 | மூல. | 42-15 | அ. | ப். த். |
| 29 | 11 | சனி | த்வி. | 12-28 | பூரா. | 35-00 | சி. | த்ரி. |
| 30 | 12 | ஞா. | த்ரி.<br>சது. | 3-30<br>55-40 | உத்ரா | 28-33 | அ. | சது. |
| 31 | 13 | திங். | பஞ். | 49-13 | சிர. | 23-25 | அ.சி. | பஞ். |

8, 23உ ஏகாதசி, 9, 25உ ப்ரதோஷம், 11உ க்ருத்திகை, 12உ அமாவாசை.

ப்ரதி தினம் ஒரு சிறிய தர்மகார்யம் செய்க

यतो धर्मः ततः कृष्णः

यतः कृष्णः ततो जयः

# வைதிக தர்ம வர்த்தனீ



धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | சார்வரி௵ வைகாசிமீ | இதழ் 8



## பொருள் அடக்கம்.



வருஷ சந்தா ரூ. 5.
தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம் :
வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

# ஸைகிள் பெடல்.

பொருள் தேடி செலவு செய்வதைவிட சேர்த்துவைப்பதில் நமக்கு ஒரு தனிஅவா உண்டு. அது சாஸ்த்ர விரோதமில்லை. நாமதை பூர்ணமாக அநுபவிக்காவிடினும் ஸந்ததிக்கு அது பயன்படும். அது நமது கடமையுமாகும். பொருள் அழிவது ஒன்று, அழியாதது ஒன்று. வேத சாஸ்த்ர தர்மாநுஷ்டாந ஆசார மெனும் பொருளே அழியாதது. பிரும்மா முதல் நமது பெற்றோர் வரை இதைக் காப்பாற்றி நமக்கு அளித்தனர்.

நாமும் அப்படியே அதைக் காப்பாற்றி நமது ஸந்ததிக்கு அளிக்கவேண்டு மல்லவா? இப்பொருள் நமது இல்லற வாழ்விலும் மறு பிறவியிலும் நமது ஸந்ததிக்கும் க்ஷேமத்தைத் தருகிறது. மாதா பிதாக்கள் செய்தது மக்களைக் காக்கும். அப்பய்ய தீக்ஷிதருக்கு அரசன் கநகாபிஷேகம் செய்தான். அழியும் பொருளைக் கொண்டு பகவானுக்கும் கலைக்கும் ஆலயம் கட்டி வைத்து அழியாப் பெருமையைப் பெற்றார்.

அவர் ஸந்ததி அமோகமாக அகில இந்தியாவிலும் சிறப்புடன் வாழ்கின்றது. அதேபோல் கோடி கன்யாதாநம் தாதாசார்யாள் செய்த புண்யம் அவர் ஸந்ததிகள் விருத்திக்கும் சுக வாழ்வுக்கும் ஸாதகமாக இருக்கிறது. ராஜா ஸர். ராமசாமி முதலியார், மணலி சின்னய்ய முதலியார், ஜட்ஜ் முத்துசாமி அய்யர், வி. கிருஷ்ணசாமி அய்யர் முதலியவர்கள் அழியும் பொருளைக் கொண்டு தனது ஸந்ததியும் கீர்த்தியும் வளரச் செய்தனர்.

அதுபோல் தற்சமயம் பலரிடம் பொருள் சேருவதில்லை. ஆதலால் அத்தகைய கார்யத்திற்கு வழியில்லை. அழியாத தர்ம சாஸ்த்ராநுஷ்டாநம் செய்யலாம். ஸந்ததியை வளர்க்கலாம்.

நன்றாக ஸைகிள் விடத் தெரிந்தவன் பெடலைச் சிறிது நன்றாகச் சுற்றிவிட்டால் பிறகு அது சுற்றாமலே ஓடும். அதேபோல் நம் முன்னோர் கர்மாநுஷ்டாநம் செய்த பலத்தால், கஷ்டமான தற்காலத்திலும்கூட நமது வாழ்வு சிறிது சிறப்புடன் ஓடுகிறது? நாம் அநுஷ்டாநம் செய்யாவிடில் நமது ஸந்ததி எப்படி சிறப்பாக வாழமுடியும்? சிறிது யோசிப்போம்.

நாம் மக்களுக்குச் சேர்த்து வைக்கும் பொருள் தர்ம கர்ம அநுஷ்டாநமே யாகும். "தர்மம் சர."

## புத்தக அறிமுகம்.

**ஸ்ரீ ராம ஸமாஜ இரண்டாமாண்டு மலர்:** பற்பல பண்டிதர்களும் ஸ்ரீ ஆசார்யாள் எழுதிய ஸ்ரீ ராமாயணம் பற்றிய அற்புதமான விஷயங்களும், கண்ணைக் கவரும் ஸ்ரீ ராமபடமும், ஸீதாஷ்டோத்ர சதநாம அர்த்தத்துடனும் உளது. ஸ்ரீ ராம ஸமாஜ கட்டடத்திற்காக 2 ரூ. நன்கொடையும், தபாலுக்காக 50 பைசாவும் அனுப்பி ஸ்ரீ பார்வதி விலாஸ், பக்தவத்ஸலம் தெரு, W. மாம்பலம், சென்னை-17ல் பெறலாம்.

**ஸ்ரீ பூர்ணாநந்த நாத ஸ்ரீ வித்யா பீட வாஸந்த நவராத்ரி வெளியீடு:** தமிழில் துர்கா ஸஹஸ்ர நாமமும், பலபண்டிதர்கள், நீதிபதிகள் எழுதிய ஷண்மதங்களைப்பற்றிய விஷயங்களும் அழகான முறையில் பல துதிகளும் வெளிவந்துளது. 59, தம்புசெட்டி தெரு, சென்னை-1ல் உள்ள ஷை பீடத்தில் அங்கத்தினராகி இலவசமாக அதைப் பெறலாமென அறிகிறோம்.

**கிரந்தாக்ஷர நூல்கள்:** ரிக்வேத ஸந்த்யாவந்தநம், தர்ப்பணம், பிரும்ம யக்ஞம், ஸாமவேத ஸந்த்யா தர்பணம், பிரும்ம யக்ஞம், போதாயன தர்ப்பணம், ஆபஸ்தம்ப, புண்யாஹ வாசநம், மூகபஞ்சாசதி, சனைஸ்சர ஸ்தோத்ரம், யஜுர்வேத சூர்ய நமஸ்காரச் சுருக்கம், அன்ன பூர்ணாஷ்டகம், ஆதித்ய ஹ்ருதயம், சியாமளா தண்டகம், ஸம்க்ஷேப ராமாயணம், கநகதாரா ஸ்தோத்ரம், தாமோதரஷ்டகம், கபர்தி காரிகை, ஸ்ரீஸூக்த புருஷ ஸூக்த பாஷ்யம் முதலியன வைதிக வர்த்தனீ புத்தகசாலை, கரிகாரத்தெரு, கும்பகோணத்தில் கிடைக்கும். விலை மற்ற விபரங்களுக்கு நேரே எழுதவும்.

**மோக்ஷ ப்ரதர்சிநீ:** சார்வரி சித்திரை முதல் தமிழ் மாதப் பத்ரிகை ஆரம்பம். 48 பக்கம். வருஷ சந்தா ரூ. 4—50 ந. பை. சேஷாத்ரி நிலயம், கோவை 12. திருவண்ணாமலையில் ஜீவன் முக்தராய் விளங்கிய ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் பக்தர்களால் நடப்பது. பக்தி, ஞானம் முதலியனபற்றி 12 விஷயங்கள் உள. தத்வமுறையில் சிறந்தது.

**சிவாலய வழிபாடு:** 46 பக்கம். 45பைசா ஸ்டாம்பனுப்பி "மாம்பலம் குருகுலத்தில்" பெறலாம். சிவாலயத்தில் எப்படி எங்கிருந்து ஆரம்பித்து, என்னென்ன சுலோகங்களைக் கூறவேண்டும்? ஏன் சண்டிகேசரிடம் கையைத் தட்டுகிறோம்? ஏன் வாசலில் உட்கார வேண்டும்? என்பது போன்ற பல தத்துவங்கள் அடங்கியது. அவச்யம் அறியவேண்டிய பல தத்துவங்களும் சுலோகங்களும் நிறைந்தது. (தொடர்ச்சி 308ம் பக்கம்.)

---

***2வ படுப்பதற்குள் 108 ராம, அல்லது சிவநாம ஜபம் செய்***
***3வ முடிந்தால் 1 ஏழைக்கு அன்னமிடு பிடி அரிசியேனுமிடு***

# அக்நி காரியத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம், ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி)

**அவிக்ஞாத ப்ராயச்சித்தங்கள்:** இதுவரை நாம் செய்த கர்மாக்களில் நாம் அறிந்தும் அறியாமலும் சில தோஷங்கள் ஏற்பட்டிருக்கலாம். அவைகள் அகல சில ப்ராயச்சித்த ஹோமங்களைச் செய்யவேண்டுமென மஹரிஷிகள் கூறினார்கள். அதில்

**அநாக்ஞாதம்** என்ற மூன்று மந்த்ரங்களின் **கருத்து:** ஓ அக்நிபகவானே! இந்த கர்மாவில் செய்யவேண்டிய அங்கத்தை நான் நன்கு அறியேன். தெரிந்தும் தெரியாமலும் சில தவறுகள் செய்யப்பட்டிருக்கலாம். அவைகளைச் சரிப்படுத்தித் தாங்கள் திருப்தி அடையவேண்டும். எங்களை ரக்ஷிக்கவேண்டும்.

2. ஓ அக்நே! யக்ஞமானது புருஷனைப் போல் அதிக அங்கமோ குறைவான அங்கமோ இல்லாமல் வேண்டிய அங்கங்களுடன் உள்ளதுபோல் இருக்கிறது. அன்றியும் இந்த யக்ஞம் பரம புருஷனால் நிர்மாணம் செய்யப்பட்டது. ஆதலால் கர்மாவின் உண்மையை நீரே நன்கு உணர்ந்தவராவீர். இந்த கர்மாவில் ஏதேனும் தவறுதல்கள் நேர்ந்திருந்தால் அவைகளை க்ஷமித்து நன்கு நடந்ததாக ஏற்றுக்கொள்ளுங்கள்.

3. குழந்தைகளை நாம் எப்படி ரக்ஷிக்கிறோமோ அப்படி பகவான் நம்மை ரக்ஷிக்கிறார். அறியாக் குழந்தைகள் போன்றவரும் உத்ஸாகமில்லாதவருமான ஹோமம் செய்பவர், இந்த யக்ஞத்தில் எந்த அங்கத்தை மநதால் அறியவில்லையோ, செய்யவுமில்லையோ அதை எல்லாம் நீர் நன்கு அறிந்தவரல்லவா? எங்கெந்த தேவர்களை அழைத்து எங்கெந்த காலத்தில் ஆராதிக்க வேண்டுமோ அவரவர்களை அழைத்து அந்தந்த காலத்தில் தக்கபடி உபசரித்தருளவேண்டும்.

4. **त्वन्नो**—காஞ்சி மண்டலத்தில் அதிகப்படி கீழ்க் காணும் ஏழு ஹோமங்கள் செய்வது வழக்கம். ஓ அக்நி தேவனே! எங்கள் பக்தி முதலியவற்றை அறிந்த நீர்

---

4a ஒருவரையும் கோபித்துக் கொள்ளாமலிரு

எங்கள் மீது வருணதேவனுக்கு எந்தவிதமான கோபம் ஏற்பட்டிருந்தாலும் அவற்றை நீர் அகற்றுவீர். நீரே கர்மாவை நன்ருக நடத்தி வைப்பவர். தேவர்களுக்குக் கொடுக்கும் ஹவிஸ்ஸைச் சுமந்து செல்பவர். நல்ல ப்ரகாசத்துடன் விளங்குபவர். நீர் விரோதிகளால் ஏற்பட்ட வதம், பந்தனம் முதலிய த்வேஷ கார்யங்களை எங்களிடம் அணுகாமல் தடுத்துக் காப்பாற்றுவீர்.

5. **सत्वन्नो**—மிகவும் விசேஷ குணங்கள் படைத்த அக்நியே! எங்களுக்கு ரக்ஷகளுக இரவும் பகலும் எங்கள் சமீபத்திலேயே இருந்துகொண்டு காப்பாற்ற வேண்டும். எங்கள் மீது வர்ணன் விடும் பாசத்தை நாசம் செய்யும். விளையாட்டில் ப்ரியமுள்ள நீர் ஸுகத்தைக் கொடுக்கக் கூடியதும் எங்களால் கொடுக்கப்பட்டதுமான ஹவிர் பாகத்தை ஏற்றுக்கொள்ளும் (சாப்பிடும்). பிறகு அடிக்கடி நாங்கள் ப்ரியமாக அழைக்கும்படி ஆகவேண்டும். [இந்த இரண்டு ஹோமங்களும் நாம் செய்யும் கர்மாக்களில் சிலவற்றை முன்னும் பின்னுமாக மாற்றிச் செய்தாலும் அல்லது ஒரு தேவதைக்காக எடுத்த ஹவிஸ்ஸை வேறு ஒரு தேவதைக்குக் கொடுத்தாலும் அந்த தோஷத்தை அகற்றுவதற்காகவும் செய்யவேண்டியவை.]

6. **यतइन्द्र**—இந்திரனே! ம்ருத்யு, ரோகம், திருடன் முதலியவற்றிடமிருந்து எங்களுக்குப் பயம் ஏற்படுகிறது. அதை அகற்றி எங்களைக் காப்பாற்றும். மேலும், இந்திரனே! எங்களைக் காப்பாற்றும் சக்தியையும் நீர் அடையும். (நாங்கள் ஸௌகர்யமாயிருந்து ஹவிஸ்ஸைக் கொடுத்தால்தான் நீர் சுகமடைவீர். ஆதலால் நீரே உம்மைக் காத்துக்கொள்ள சக்தியடைவீர்.) எங்களது சத்ருக்களையும் அவர்களால் ஏற்படும் சண்டை முதலியவற்றையும் அடக்கி அருள்வீர்.

7. **स्वस्तिदा:**—இந்த இந்த்ரன் நமக்கு எதிரிலிருந்துகொண்டு நம்மைக் காப்பவனுகவும், மங்களத்தைத் தருபவனுகவும், பிரஜைகளை ரக்ஷிப்பவனுகவும், பாபத்தைப் போக்குபவனுகவும், சத்ருக்களால் ஏற்படும் சண்டையைத் தடுப்பவனுகவும், ஜிதேந்திரியனுகவும், மிகவும் சோபன குணங்களை அளிப்பவனுகவும் இம்மாதிரி பல

---

**5வ ஒரு சிறந்த பெரியவரை தர்சித்து நமஸ்கரி**

குணங்களுடன் கூடியவனுமான இந்திரன் பயமில்லாமல் இருக்கும்படி நம்மைக் காப்பாற்ற வேண்டும். [இந்த இரண்டு ஹோமங்களும் துஸ்ஸ்வப்பனம் கண்டாலும், ஏதாவது உத்பாதம் சம்பவித்த காலத்திலும் செய்ய வேண்டியவை.]

8. **आभिर्गीर्भिः**–உச்சைஶ்ரவஸ் என்னும் குதிரையில் வீற்றிருக்கும் இந்திரனே! எங்களுடைய ஸ்துதிகளால் மிகவும் ப்ரீதியடைந்த நீர் இந்த கர்மாவில் விட்டுப்போன அங்கத்தை எங்களுக்கு அபிவிருத்தியைக் கொடுக்கும்படியாகச் செய்யும். உம்மை ஸ்தோத்திரம் செய்பவரின் அனுக்ரஹத்திற்காகப் பெரிய பர்வதங்களையும், மேகங்களையும் முறியடிக்கிறீர். நாங்கள் உம்முடைய அனுக்ரஹத்தினால் நிறைந்த தனத்தை அடைவோம். (மழை பெய்து க்ஷேமம் அடைவோம் எனக் கருத்து). [இந்த ஹோமத்தை ஸ்வரம், வர்ணம், பதம் இவைகளின் லோபம் ஏற்பட்டிருக்குமானாலும் செய்யவேண்டும்.]

9. **त्र्यंबकं** — மூன்று கண்களை யுடையவரும், நல் வாஸனையுள்ளவரும், (புண்ய கர்மா என தாத்பர்யம்) ஶரீரம், தனம் முதலியவற்றிற்கு புஷ்டியை அளிப்பவருமான பரமேஶ்வரனை யக்ஞத்தில் ஆராதிக்கிறோம். எப்படி வெள்ளேரிப் பழமானது நன்றாகப் பழுத்தவுடன் தானாகவே காம்பினின்றும் பிரிந்து விடுகிறதோ அதைப் போல் நானும் ஈஶ்வர ப்ரஸாதத்தினால் ம்ருத்யுவினின்றும் விடுபடவேண்டும்.

10. **इदं विष्णुः**– மஹாவிஷ்ணு வாமனாவதாரம் எடுத்து மூவ்வுலகையும் மூன்றடிகளால் அளந்தார். அப்போது அவர் காலில் தூசிபோல் உள்ளது இவ்வுலகம். (அப்பேர்பட்ட மஹாவிஷ்ணு இந்த ஹோமத்தினால் திருப்தியடைய வேண்டும் என தாத்பர்யம்.)

இதற்கு மேல் வ்யாஹ்ருதி ஹோமங்கள் சிறிய சில தோஷம் தீர செய்யவேண்டும்.

கடைசியில் **सप्त ते** என்ற மந்த்ரத்தினால் (இரண்டு தர்விகளையும் சேர்த்து வலது கையில் வைத்துக்கொண்டு ஆஜ்யஸ்தாலீயை இடதுகையில் எடுத்துக்கொண்டு) தாரையாக ஹோமம் செய்யவேண்டும். மந்திரத்தின் கருத்து: அக்னி தேவனே! உமக்கு மிகவும் ப்ரியமான ஸமித்

---

**6வ ஸத்கதை நடந்தால் பக்தியோடு ச்ரவணம் செய்**

துக்கள் ஏழு: (அரசு, அத்தி, பாலாசம், வன்னி, சொத்தக்களா, இடிவிழுந்த மரத்தின் துண்டு, தாமரை இலை). உமக்கு ப்ரியமான ஏழு நாக்குகள்: (ஹிரண்யா, கநகா, ரக்தா, க்ருஷ்ணு, ஸுப்ரபா, அதிரக்தா, பகுரூபா). உமக்கு ப்ரியமான மந்திரங்கள் ஏழு: உமக்கு ப்ரியமான இருப்பிடமும் ஏழு வகை: (அவைகள் யக்ஞத்தில் கூறப்பட்டவை. கார்ஹபத்யம், தக்ஷிணுக்னி, ஆஹவநீயம், ஸப்யம், ஆவஸத்யம், ப்ராஜஹிதம், ஆக்னீத்ரீயம்). உம்மை யக்ஞத்தில் ப்ரியமாக அழைக்கிற ஹோதாக்கள் ஏழுபேர்: (ஹோதா, மைத்ராவருணன், ப்ராம்ஹணுச்சம்ஸீ, அச்சாவாகன், போதா, நேஷ்டா, ஆக்னீத்ரன்). உம்மை யஜமானர்கள் ஏழுவிதமாகப் பூஜிக்கிருர்கள். (அவைகள்: அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடயீ, அதிராத்ரம், அப்தோர்யாமம், வாஜபேயம் என்று ஸோமயாக விசேஷங்கள்). இப்பேர்பட்ட மஹிமையுடன் கூடிய நீர் ஆஹவநீயம் முதலிய உத்பத்தி ஸ்தானங்களை இந்த ஆஜ்யத்திஞல் நான்குபுறமும் அடையும்படியாகச் செய்யும். (இந்த ஹோமத்திஞல் அக்னிபகவானுக்கு பரமதிருப்தி ஏற்பட்டு நம்மையும் நம்மைச் சார்ந்தவரையும் ரக்ஷிப்பார் என தாத்பர்யம்).

ஆஜ்ய பாத்ரத்தை வடக்கில் வைப்பதால் முன் தேவ கார்யத்துக்காக கிரஹிக்கப்பட்டதை கார்யம் முடிந்தவுடன் மறுபடியும் விஸர்ஜனம் செய்ய வேண்டியது. யஜமானனும் பத்நியும் ஸுகமாயிருப்பதற்காகவும் ப்ரஜாபசுஸம்ருத்திக்காகவும் என்று வேதம் கூறுகிறது. [3 அஷ். 3 ப்ர. 9 அனு]. பிறகு மூச்சுத் திணறும்படியாக ப்ராணுயாமம் செய்ய வேண்டும். இதஞல் சில சாதாரணமான தோஷங்கள் அகலும்.

**ப்ரணீதா:** அக்நிக்கு வடக்குத் திக்கில் தீர்த்தத்துடன் வைத்திருக்கும் பாத்ரத்தை எடுத்து நமக்கு எதிரில் வைத்து அதில் கொஞ்சம் வேறு தீர்த்தத்தையும் சேர்த்து (இதஞல் என்னுடைய கார்யங்களை பலனுள்ளதாகச் செய்கிறீர் என தாத்பர்யம்) கிழக்கு முதலிய நான்கு திக்குகளிலும் விடுவதால் (நீ எல்லா திக்குகளையும் வ்யாபித்திருக்கிருய், அதஞல் என் கார்யத்தை ஸபலமாக்கும்) எனக்கு யாதொரு குறையும் இல்லாமல் செய்யக்கடவீர் என்று கருத்து.

---

**7வ ஒரு பசுவுக்கு பிடி புல், அல்லது அகத்திக்கீரை அளி**

## சாந்தோக்ய உபநிஷத்.

அம்ருதம் இப்படிப்பட்டதென்று நன்கு அறிபவன் வஸுக்களுடன் சேர்ந்து அக்நிமுகமாக அம்ருதத்தைப் பார்த்து த்ருப்தி அடைகிறுன். அந்த ரூபத்தை அடைந்து உத்ஸாஹ முள்ளவனுகிறுன்.

அன்றியும் அவன் ஸூர்யன் உதயமாகி அஸ்த மிக்கும் வரை வஸுக்களின் ஆதிபத்யமான ஸ்வராஜ் யத்தை அடைகிறுன்.

இரண்டாவதாகக்கூறிய அம்ருதத்தை ருத்ரதேவர்கள் இந்த்ரன் முகமாகப் பெற்று த்ருப்தி அடைந்து ரவி கிழக்கே உதித்து மேற்கே அஸ்தமனமாகும் வரையிலும் தெற்கே உதித்து வடக்கே அஸ்தமனமாகும் வரையிலும் போகத்தை அனுபவிக்கிறுர்கள்.

மூன்ருவதான அம்ருதத்தை ஆதித்ய தேவர்கள் வருண முகமாக அடைந்து பாநு தெற்கே உதயமாகி வடக்கே அஸ்தமநமாகும் வரையிலும் மேற்கே உதித்து கிழக்கே மறையும் வரையிலும் ஸுகத்தை அநுபவிக் கிறுர்கள்.

நான்காவதான அம்ருதத்தை மருத் எனும் தேவர் ஸோமன் மூலமாகப் பெற்று த்ருப்தி அடைந்து ஸூர்யன் மேற்கே தோன்றி கிழக்கேயும் வடக்கே தோன்றி தெற்கேயும் மறையும் வரை போகத்தை அநுபவிக் கின்றனர்.

ஐந்தாவது அமிருதத்தை ஸாத்யர்கள் பிரும்மா முக மாக அடைந்து களித்து ஆதித்யன் வடக்கேத் தோன்றி தெற்கே அஸ்தமிக்கும் வரை மேலே உதயமாகி கீழே அஸ்தமிக்கும் வரை ஸுகத்தை அநுபவிக்கின்றனர்.

ஆதித்தியன் மேலே உதயமாகி பிராணிகளில் கர்ம பல போகத்தை ஒழித்துவிட்டு பிறகு உதயமாவதே இல்லை. அத்விதீயனுய் நடுவில் இருந்துகொண்டு எப் போதும் பிரகாசிக்கிறுர். ஸாத்யர்களுடைய லோகத் திற்கு மேலே பிரும்மலோகம் இருக்கின்றது. அங்கு எப்போதும் உதயாஸ்தமன மின்றி ஸூர்யன் பிரகாசிக் கின்றுர்.

---

7உ இரு வேளைகளிலும் சாப்பிடும் போது பேசாமலிரு.

மற்ற விடங்களில் ஸூர்யன் உதயமாகும் போது பிராணிகளுடைய ஆயுஸ்ஸைக் கொண்டுவருகிறூர். அஸ்தமனமாகும்போது ஆயுளைக் கொண்டுபோகிறூர். பிரும்ம லோகத்தில் அங்ஙனம் இப்படி உண்டோ என ஸந்தேஹிக்க வேண்டாம் என உபநிஷத் உருதி கூறுகிறது.

உபநிஷத் கூறும் க்ஞாநத்தை உணர்ந்தவனுக்கு உதய அஸ்தமநமில்லை. எப்போதும் பிரும்மஸ்வரூபியாகி பிரகாசித்துக் கொண்டிருப்பான்.

இந்த மதுவித்யையை ஹிரண்யகர்ப்பன் பிரஜாபதிக்குக் கூறினர். அவர் மனுவிற்கும், மநு இக்ஷ்வாகு முதலியவர்க்கும் கூறினர். அந்த க்ரமத்தில் உத்தாலக முநி தனது தந்தையிடம் இதை உபதேசம் பெற்றூர்.

இந்த வித்யையை குரு ஜ்யேஷ்ட புத்ரன் அல்லது யோக்யனை சிஷ்யனுக்கு உபதேசிக்க வேண்டும். மற்ரோருக்கு உபதேசிக்கக் கூடாது. இதற்கு தக்ஷிணையாக ஸகல பூமியையும் கொடுத்தாலும் போதாது. இதற்கு ஸமம் வேறொன்று மில்லை.

மது வித்யோபாஸநம் முடிந்தபின் **காயத்ரீ உபாஸநம்** கூறப்படுகிறது. (நித்ய கர்மாவான ஸந்த்யாவந்தநத்தில் ஜபம் செய்யப்படும் காயத்ரியை க்ஞாந மோக்ஷங்களைப் பெற விரும்புவோர் இங்ஙனம் உபாஸிக்க வேண்டும். நித்ய காயத்ரியை வழக்கப்படி ஜபித்துவிட்டு இதைத் தனியாகச் செய்யவேண்டும். இத்தகைய உபாஸகர் மிகக் குறைவேயாவர். அன்றியும் நமது பத்ரிகையைப் பார்த்து உபாஸிப்பவர் தனி குரு உபதேசம் பெற்றே செய்யவேண்டு மாதலால் பொதுவாக அதை அறிவதற்காகச் சுருக்கமாகக் கூறுகிரோம். உலகில் காணப்படும் எல்லா வஸ்துக்களும் காயத்ரீயேயாம். காயத்ரீ மந்த்ரம் வாக்கு வடிவமானது. வாக்கினல் கூறப்படுவதாலும் அது கூறுபவனைக் காப்பதாலும் காயத்ரீ எனப்படுகிறது.

காயத்ரீ பிரிதிவியாகவும் நம் ஶரீரமாகவும் ப்ராணணகவும் ஹ்ருதயமாகவும் ஹ்ருதய ஆகாஶமாகவும் இருக்கின்றது. அந்த காயத்ரியின் ஒரு பாதமே இந்த ஸமஸ்த உலகமுமாம். மற்ற மூன்று பாதங்கள் ஜோதிர்மயமாக உள்ளன. ஹ்ருதயகமலத்திலுள்ள ஆகாஶமே பரமாத்மா என்று அறிபவன் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைப் பெறுவான்.

---

**9வ ஐந்து நிமிஷம் உன் குலதேவதையை த்யாநம் செய்.**

# ★ அஷ்டாவக்ர கீதை.

ஸ்வ ஸ்வரூபத்தை உணர்ந்த ஞானிக்கு மனதிலே யாதொரு விதமான விகல்பமும் தோன்ருது. வெளியிலும் யாதொரு கட்டுப்பாடுமின்றி எங்கும் எப்போதும் ஸஞ்சரிப்பான். அவனது செயல் பித்தனை ஒத்திருக்கும்.

**15-ம் அத்யாயம்:** குரு: ஏதோ ஒரு வகையான வேதாந்த உபதேசம் பெற்றவன் ஸத்வகுணம் நிறைந்த புத்தியுடன் இருந்தால் போதும். அவன் பிழைத்திருக்கும் வரை ஆத்ம ஸ்வரூபத்தைத் தேடிக்கொண்டே இருப்பான். ஸத்வ புத்தி இல்லாதவன் மோஹத்தை அடைவான்.

சுருங்கச் சொல்ல வேண்டுமானுல் விஷயங்களில் வைராக்யம் கொள்வதே மோக்ஷம். விஷய ரஸத்தில் ஆசைகொள்வதே பந்தம். இவ்வளவுதான் க்ஞாந உபதேசம்! இதைக் கேட்டபின் உன் இஷ்டப்படி நட.

வாயால் ஓயாமல் வேதாந்தம் பேசுவது, புத்தியைக் கொண்டு இது சரி இது தவறு என வாதிப்பது, இந்த கார்யங்களில் முயற்சி செய்வது இவைகள் வீண் எனக் கூறுகிறது உண்மையான தத்வ க்ஞாநம். இப்படிப் பட்டவர்களை ஊமைபோலும் ஜடனுகவும் சோம்பேறி போலும் செய்துவிடும்.

(ஸதாசிவ ப்ரும்மேந்த்ரர் என்ற வித்வான் ஸகல சாஸ்த்ரங்களையும் உணர்ந்தவர். தனது வாக் ஸாமர்த்யத்தையும் சாஸ்த்ர ஞாநத்தையும்கொண்டு ஸகல பண்டிதர்களையும் வாதத்திற் கழைத்து தோல்வி அடையும்படிச் செய்து வந்தார். இதை அறிந்த அவரது குரு ஸ்ரீ பரம சிவேந்த்ர ஸரஸ்வதி என்ற ஜீவன் முக்தர் "வாயை மூடு" என்று உபதேசிக்க அதுமுதல் அவர் மௌனியாகி நிஷ்டையில் அமர்ந்தார். ஸதாசிவேந்த்ர ஸரஸ்வதியின் ஸமாதி நெரூர் என்ற விடம். ஸ்ரீ பரம சிவேந்த்ர ஸரஸ்வதி திருவெண்காட்டில் ஸமாதி அடைந்தார்).

நான் என எதைக் கூறுகிறேமோ அது உடலல்ல. அதற்கு ஒரு உடலுமில்லை. அது ஒன்றையும் அநுபவிப்பதில்லை. ஒன்றையும் செய்வதுமில்லை. ஓ சிஷ்ய! நீ சித்வடிவனுக இருந்து நடக்கின்ற காரியங்களை ஸாக்ஷியாகயிருந்து பார்க்கின்றுய்! உனக்கு யாதொரு தேவையுமில்லை! ஸுகமாக இரு.

---

10வ அருகிலுள்ள ஆலயத்தில் ஒரு தீபம் ஏற்று.

ஆசை கோபம் என்பவை மநதின் கார்யங்களாகும். நீ மநதுமில்லை. யாதொரு விகல்பமு மில்லாத அறிவு வடிவன். நீ யாதொரு மாறுதலுமில்லாமல் ஒரே ரூபமாக இருக்கிறாய் என அறிந்து ஸுகமாக இரு.

நான் என கூறுகின்ற நீ எல்லா ப்ராணிகளிடமும் இருக்கின்றாய். அதனால்தான் எல்லோரும் நான் நான் எனத் தன்னை அழைக்கின்றனர். அந்த பிராணிகள் எல்லாம் நான் எனும் உன்னிடமே இருக்கின்றன என நன்கு உணர்ந்து அஹங்கார மமகாரத்தை விட்டு ஸுக மாக இரு.

சின்மாத்ரனாக உள்ள ஓ சிஷ்ய! கடலில் அலை தோன்றி கடலிலேயே மடிவது போல் ஆத்மாவினிடம் உலகெலாம் தோன்றி அங்கேயே லயமாகின்றது. இதில் சிறிதும் ஸந்தேஹமில்லை. நீ கவலை யற்றிரு.

இதை நம்பு! இதில் உனக்கு மோஹம் வேண்டாம். நீ க்ஞாந ஸ்வரூபியாகவும் பகவானாகவும் ஆத்மாவாகவு மிருக்கின்றாய். பிரகிருதிக்கு மேலானவன் நீ.

ஸத்வ ரஜஸ் தமஸ் என்ற குணங்களாலேதான் உனக்கு உடல் உண்டாகிறது. இருக்கிறது. அழிகிறது. நீ என்ற ஆத்மா உண்டாவதில்லை. அழிவதுமில்லை. ஆதலால் உடல் அழிந்தால் நீ இறப்பதாக நினைக்காதே! இறப்போமே! என வருந்தாதே.

இந்த உடல் ஒரு கல்பம் வரை இருந்தாலென்ன? இப்போதே மடிந்தாலென்ன? சைதன்யமாத்ரமாகவுள்ள உனக்கு விருத்தியுமில்லை. குறைவுமில்லை.

நீ கரைகாண முடியாத ஒரு பெருங்கடல் போலிருக் கின்றாய்! இதில் உலகமெனும் அலை தோன்றித் தோன்றி மடிகிறது. அது அதன் ஸ்வபாவமாதலால் உனக்கு அதனால் விருத்தியு மில்லை. குறைவுமில்லை.

குழந்தாய்! நீ கேவல சைதன்ய வடிவன் என நம்பு. சைதன்யத்திலிருந்து உண்டான உலகம் உன்னைத் தவிர வேறல்ல. அதனால் நீ ஒதுக்கித் தள்ள வேண்டிய பொருள் ஒன்றுமில்லை. ஏற்றுக்கொள்ள வேண்டியதும் ஒன்று மில்லை. ஒன்றை விடுவது, மற்றொன்றை ஏற்பது என்பது வெறுங் கல்பனைதான்.

---

**11உ நல்ல தார்மிக நூலை பத்து நிமிஷமாவது படி.**



# பால பாரதம்.

பாலர் பகுதி.



## துரோண பர்வா.

கே: நண்பனான கர்ணன் ஒருவரையும் கொல்ல வில்லையா ?

ப: பாண்டவரில் அர்ஜுனனைத் தவிர மற்றவரைக் கொல்வதாக பிரதிக்ஞை செய்தான். இதைக் கேட்டு கிருபாசார்யர் ஏன் வீணாக சபதம் செய் கிறாய் ? எவ்வளவு முறை நீ பயந்து ஓடினாய் என் றார். வந்தது கோபம் ! பாண்டவ பக்ஷபாதியான உமது நாக்கை அறுப்பேன் என சீறி ஓடினான். கர்ணனைக் கொல்வேனென அசுவத்தாமா ஓடினான்.

கே: அடிக்கடி இப்படி கௌரவர்களுக்குள்ளேயே மல்லயுத்தம் நேருகிறது. வழக்கப்படி துர்யோத நன் இருவரையும் ஸமாதானப்படுத்தியிருப்பான்?

ப: ஆமாம்! கர்ணனையும் அசுவத்தாமாவையும் பாண் டவரிடம் போர் செய்யும்படி வேண்டினான்.

கே: மேலே என்ன நடந்தது ?

ப: இருபுறத்திலும் அதிஉக்ரமாக போர்நடந்தது. பல வீரர்களும் சேனைகளும் மாண்டன. பலர் தோல்வி அடைந்தனர். பகவான் கடோத்கஜனை அழைத் தார். துர்யோதநனது நண்பனும் மிக்க பலமுள்ள வனுமான அலம்புஸன் அலம்பலன் என்ற இரு ராக்ஷஸர்களைக் கொன்றான் அவன்.

கே: ராக்ஷஸர்களுக்கு இரவு வேளைதானே நல்லபலத் தையும் உத்ஸாஹத்தையும் ஊட்டும் வேளை ! பலரை அவன் கொன்று குவித்திருப்பான்.

ப: அதனால் தான் துர்யோதநன் வேண்டியபடி கர் ணன் இந்த்ரனிடமிருந்து வாங்கிய சக்தி என்ற உயர்ந்த ஆயுதத்தை கடோத்கஜன் மீது விட்டு அவனைக் கொன்றான்.

கே: அடடா ? பீமன் மிக்க வருந்தி இருப்பான் ?

ப: பீமன் மாத்ரமா ? பாண்டவர் அனைவரையும் அது துக்கக்கடலில் அமிழ்த்தியது. அதில் ஸந்தோஷ மடைந்தவர் பகவான் கிருஷ்ணன் ஒருவரேயாவர்.

---

12௨ குழந்தைகளுக்கு நல்ல ஸ்தோத்ரங்களைக் கூறி வை

**கே :** அவருக்கு அதில் என்ன ஸந்தோஷம் ?

**ப :** பாண்டவரும் பகவானை இப்படியே கேட்டனர். அர்ஜுனனைக் கொல்வதற்காக இந்த்ரனிடம் உடன் பிறந்த தனது குண்டலங்களைக் கொடுத்து அந்த சக்தியைப் பெற்றான் கர்ணன். அதனால் அர்ஜுனனைக் கொன்றால் மற்றவர் இறப்பர் எனநித்யம் இரவில் பேசி மறுநாள் காலையில் சக்தியைப் பிரயோகிப்பதாக நினைப்பான். அது நியாபகம் வராமல் செய்து வந்தேன் நான். இனி அர்ஜுனனைக் கொல்ல முடியாது. கர்ணன் சாவான் என்றார் பகவான்.

**கே :** பகவான் இல்லாவிடில் பாண்டவருக்கு ஜயம் ஒருநாளும் இல்லை எனலாம். மேலே.

**ப :** துரோணர் துருபதன் விராடன் முதலியவர்களைக் கொன்றார். பதினைந்காவது நாள் இரவு பல ஸேனைகளை அழித்தார். அவரைக்கொல்ல பகவான் ஒரு யுக்தி செய்தார்.

**கே :** அதென்ன யுக்தி ? பகவான் வேலை ருசிகரமானது!

**ப :** அசுவத்தாமா இறந்தாரென்று தர்மர் கூறினால் அவர் வில்லை எறிவர். அப்போது அவரை சுலபமாகக் கொல்லலாம் என்பது!

**கே :** தர்மர் அப்படி பொய் சொல்வரா ?

**ப :** அதனால்தான் ஒரு யானைக்கு அசுவத்தாமா எனப் பெயரிட்டு அதைக் கொல்லும்படி பீமனுக்கு கூற அவனுமதைக் கொன்றான்.

**கே :** தர்மர் அச்வத்தாமா இறந்தான் என கூறியபின் என்ன நடந்தது ?

**ப :** அஸ்த்ர ஶஸ்த்ரங்களை எறிந்து விட்டு துரோணர் ப்ரணவ த்யானம் செய்ய அவரது தலை வெடித்து பிரும்மாந்த்ரத்தின் வழியாக ஜீவன் சென்றது. த்ருஷ்டத்யும்நன் அவர் கழுத்தை அறுத்தான்.

**கே :** செத்த பாம்பை அடித்த வீரன் ஆனான். குரு பக்தனான அர்ஜுநன் இதைக் கண்டிக்கவில்லையா ?

**ப :** தர்மரையும் தன்னையும் மைத்துனனான த்ருஷ்டத்யும்நனையும் கண்டித்தான். தான் கொன்றது

---

13வ பூஜை படம் அருகே அமர்ந்து 5நிமிஷம் பேசாமலிரு

தவரில்லை என்ற திருஷ்டத்யும்னனை ஸாத்யகி கதையால் தாக்க பீமனதைத்தடுத்தான்.

கே: இளம் வீரசிங்கம் அச்வத்தாமா என்ன செய்தான்

ப: முதலில் கண்ணீர் விட்டு கோபாக்னி ஜ்வலிக்க நாராயணாஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். கிருஷ்ணன் சொற்படி அனைவரும் தேரை விட்டிறங்கி ஆயுதங்களை எறிந்து அஞ்ஜலி செய்தனர்.

கே: அதனால் அந்த ஆபத்தை தாண்டினர் போலும்.

ப: பீமன் அது நாராயணாஸ்த்ரமாயினும் சத்ரு பிரயோகித்ததால் அதை வணங்க மாட்டேன் என எதிர்த்தான். கிருஷ்ணனும் அர்ஜுனனும் பலாத்காரமாக அவனது ஆயுதத்தைப் பிடுங்கி எறிந்து அவனையும் ரதத்திலிருந்து இறக்கினர்.

கே: அச்வத்தாமா தன் பிதா இறந்த துக்கத்துடன் நாராயணாஸ்த்ரம் வீணானதால் இரு மடங்கு துக்கப்பட்டிருப்பானல்லவா?

ப: ஆம் தற்செயலாக அங்கு வந்த வ்யாஸர் நர நாராயணர்களே பார்த்த கிருஷ்ணர்கள் என்பதை விளக்கி சாந்தப்படுத்தினார். அர்ஜுனன் தான் கண்ட திவ்ய புருஷன் யார்? என வினவ கிருஷ்ணர் விளக்கினார்.

கே: யார் அவர்? அவரை எங்கே கண்டான்?

ப: தனது பாணம் செல்லுமிடமெல்லாம் முன்சென்று ஒரு திவ்ய புருஷன் பகைவர்களைக் கொல்வதைக் கண்டு கேட்க அவரே பரமசிவன் எனக் கூறி கிருஷ்ணன் ருத்ரத்தினால் அவரைத் துதித்தார்.

கே: இப்படி தெய்வாநுக்ரஹத்தால் தான் பாண்டவர் வெற்றி பெறுகின்றனர். துரோணருக்கப்புறம் நிச்சயமாக கர்ணனுக்கே ஸேநாதிபதி பட்டமளித்திருப்பான் துர்யோதநன்!

ப: ஆம்! அச்வத்தாமாவை உத்ஸாகப்படுத்தி பாண்டவரைக் கொல்ல அவனுக்குப்பட்டம் தருவதாகக் கூறினான். அச்வத்தாமா தான் அதை மறுத்து கர்ணனை ஸேனாதிபதியாக்கினர்.

கே: கர்ணன் ஆப்த நண்பன் ஆனதால் பாண்டவரைக் கொல்ல தீவ்ர முயற்சி செய்திருப்பான்.

---

14a உண்பதற்கு முன் ஒரு சாதுவுக்கு காலணா கொடு.

ப: அது உண்மைதான். ஆனல் ஆரம்பத்திலேயே ஒரு பெரிய தகராரு உண்டாகி விட்டது. கிருஷ்ணனைப்போல் சிறந்த ஸாரதி வேண்டும், சல்யனை ஸாரதியாக அமர்த்தென்ருன். துர்யோதனன் சல்யனிடம் கேட்க அவர் சுத்த க்ஷத்ரியன். தேரோட்டுவதா ? அதிலும் தேரோட்டும் ஜாதிக் காரனுக்கு தேரோட்ட வா என கடிந்தார்.

கே: தேரோட்டுவது மட்டமானதா? பகவான் ஓட்டினரே?

ப: அந்தந்த ஜாதித் தொழிலை அவரவர்தான் செய்ய வேண்டும். பகவான் பாண்டவரிடம் அன்பினல் தேர் மாத்ரமா ஓட்டினர். தூது செல்லவில்லையா ? பிரும்மா சிவ ஸாரதி. கிருஷ்ண பார்த்த ஸாரதி. சல்யன் அதுபோல் கர்ண ஸாரதியாக வேண்டுமென துர்யோதனன் சல்யனைத் துதித்து காலில் விழுந்து ஏற்கச் செய்தான்.

கே: சல்யன்கூட பீஷ்மாதிகளைப் போல் பாண்டவ பக்ஷபாதி அல்லவா ?

ப: ஆமாம்! அதனல்தான் கர்ணன் பார்த்தனைக் கொல்வதாகவீரவாதம்பேசியபோது ''நீ காக்கை. அர்ஜுனன் ஹம்சம்'' என கர்ணனை மட்டம் தட்டி வந்தார்.

கே: பிறகு என்ன நடந்தது ?

ப: பீமனல் பலர் கொல்லப் பட்டனர். பலர் தோல்வியுற்றனர். கர்ணன் கடுமையாக தர்மரைத்தாக்கி மூர்ச்சையாக்கி வீழ்த்தினன். அர்ஜுனன் பீமனை கர்ணனுடன் போருக்கு நிறுத்தி கூடாரத்தில் படுத்திருக்கும் தர்மர் நிலையை அறியச் சென்ருர்.

கே: தர்மருக்கு ஏதேனும் நேர்ந்தால் மற்றவர்களும் இறப்பதாக பிரதிக்ஞை அல்லவா ? அங்கு என்ன நடந்தது ?

ப: பலமான அடியால் வருந்திய தர்மர் கர்ணனைக் கொன்று விட்டு வந்திருக்கிருன் தம்பி என அவனை பிரமாதமாகக் கொண்டாடினர். கிருஷ்ணன் உமதருளால் விரைவில் அவனைக் கொல்வான் என்றவுடன் கோபம் வந்தது! நீ ஒரு வீரன உனக்கு காண்டீவம் எதற்கு ? தூரே எறி என்ருர்.

  



 

# உபமன்யு பக்த விலாஸம்.

 

## 22. திருநாவுக்கரசு நாயனார். (சித்திரை மீ தொடர்ச்சி)

தமோரிபு எனும் நாவுக்கரசு குளம் வெட்டல் விருந்தளித்தல் புலவரைப் போற்றல் முதலிய ஸாமான்ய தர்மத்திலீடு பட்டார். சமணர் நிறைந்த பாடலீபுரம் சென்றார். சமணமதத்திலீடுபட்டு அந்நூல்களிலும் மற்றதிலும் பற்று கொண்டார். தர்மஸேநன் என சமணதீக்ஷா நாமம் பெற்று திவ்ரமாக சமணமதத்தை ஆதரித்தார். திருவதிகையிலே சிவத்தொண்டு செய்துவரும் திலகவதியார் தம்பி நிலையை நினைத்து வருந்தினாள். இறைவன் அவள் கனவிலே தோன்றி "சூலை நோயால் அவனைத் தடுத்து ஆட்கொள்வோம்" என்றார். சில நாட் சென்ற பின் பொறுக்க முடியாத வயிற்றுவலி நாவுக்கரசை வாட்டிற்று.

இதைக் கண்டு வருந்திய ஸஹோதரி நம் குலதெய்வமான ஶிவனைப்பாடி வேண்டிக்கொள் எனக்கூறி விபூதி யளித்தாள். அங்ஙனமே அவர் பாட நோயகன்றது. சுவை நிறைந்த அவரது பாட்டுகளைக் கேட்ட பரமன் (ஜிஹ்வேஶன்) திருநாவுக்கரசன் என அழைத்தார். அன்று முதல் சமணமதத்தை விட்டு சைவத்திலீடுபட்டு ஆலயங்களிலுள்ள புற்பூண்டுகளை அகற்றும் (உழவாரப்பணி) தொண்டில் ஈடு பட்டார். இதைக் கண்டு கோபங்கொண்ட சமணர், அவரை சுண்ணாம்புக் காளவாய் அறையில் ஏழு நாட்கள் பூட்டி வைத்தனர்.

சிவனருளால் அவர் சிறுதும் கலங்காதிருந்தார். விஷமூட்டினர். மதயானையை ஏவினர். கருங் கல்லுடன் கட்டிக் கடலில் தள்ளினர். அப்பப்போது ஒவ்வொரு பாட்டுப் பாட பகவான் அந்தந்த ஆபத்திலிருந்து காத்தருளினார். இதைக்கண்டு எல்லோரும் வியந்து நாவுக்கரசை வரவேற்றுக் கொண்டாடினர். பல வகையில் பக்தரைத் துன்புறுத்திய பல்லவராஜன் இவர் பெருமையைக் கண்டு கொண்டாடி அவனும் சைவனானான். சிவ

---

16வ நவக்ரஹங்களை தர்சி. நமஸ்கார ப்ரதக்ஷிணம் செய்

சின்னமான சூலமும் விருஷபமும் தன் உடலில் அடையாளமாக இருக்க வேண்டுமெனப் பாடினார். அங்ஙனமே இரு தோள்களிலும் அந்த சின்னங்கள் தோன்றின. பல க்ஷேத்ரங்களுக்குச் சென்றுப் பாடி சிதம்பரத்திலே சில காலம் தங்கினார்.

அச்சமயம் சீர்காழியில் அன்னைப் பால் அருந்தி அருங்கவி பாடும் ஞான ஸம்பந்தர் பெருமையைக் கேட்டார். அவரைத்தர்சிக்க அடியார்களுடன் செல்ல ஸம்பந்தர் இவரை வரவேற்று அப்பரே! என்றார் இவர் அடியேன் என அருகே சென்றார். இருவருங்கூடி கவிபாடி அளவளாவிப் பல தலங்களுக்குச் சென்றார்கள். அன்று முதல் அப்பரெனும் பெயர் ஸுப்ரஸித்தமானது. திருவீழிமலையில் சில காலந் தங்கினார். அச்சமயம் மழையின்றி உலகில் வறுமை வாட்டியது. பல அடியார்கள் பசிப்பிணியால் வருந்தினர். உலகிற்குப் படியளிக்கும் பரமன் இருவர் கனவிலும் தோன்றி "இன்று முதல் உங்களுக்குக் கிடைக்கும் பொற்காசைக் கொண்டு பசி ஆற்றுங்கள்" என பஞ்சம் அகலும் வரை இறைவன் பொற்காசு அளித்தார். பிறகு வேதாரண்யம் சென்றனர். அடியார் கணம் சூழ்ந்தது. வேதங்கள் வந்து வழிபட்டுச் சென்றவாயற்படி வெகுநாட்களாக மூடிக்கிடந்தது. ஸம்பந்தர் கூறியபடி, அப்பர், கதவு திறக்க ஒரு பாட்டுப் பாடினார். கதவு திறக்கவில்லை. மற்றொரு பாட்டுக் கூறினார். கதவுதிறந்தது. அவ்வழியே சென்று வேதாரண்யேச் வரரை தர்சித்து வந்தார்கள். அந்தக்கதவு மூடும்படி ஸம்பந்தர் கூறிய ஒரே பாட்டினால் அது மூடிற்று. சமணருடன் வாதாடி சைவத்தைத் தழைக்க வைக்க ஸம்பந்தர் மதுரை சென்றார்.

அப்பர் நாகை முதலிய பல தலங்களுக்குச் சென்றார். திருப்பைஞ்ஞலீ என்ற தலத்தை நாடிச் சென்றபோது வெய்யிலும் வழிநடையும் தாஹமும் பசியும் வாட்ட அடியார் கூட்டம் ஆங்காங்கு அகன்றது. சித்தத்தை சிவன் பால் வைத்து பசி, தாஹம், வெய்யில் கால் வலியை கவனியாமல் நடந்தார் அப்பர். "அடியார் துன்பத்தை

---

17வ ஒரு பிடி அன்னம் காக்கைக்குப் போட்டு உண்

ஐயன் பார்ப்பரோ'' பாலை வனம் போன்ற வழியிலே ஒரு குளம். ஆங்கொரு அடியார், அன்ன மூட்டையுடன் அப்பரை வரவேற்று பசி தீர்த்தார். தானும் அந்த தலமே செல்வதாகக் கூறினார். பின்தொடர்ந்து செல்ல முன் சென்றவர் ஆலயத்திலே மறைந்தார். அப்போது தான், அப்பர் தனக்காக தடாகமுண்டு பண்ணி அன்னமுமளித்து வழிகாட்டியவர் இறைவன் என உணர்ந்தார்.

கைலாஸங் காண பல்லாண்டுகளாக வழி நடந்தார். பல நாடுகளைக்கடந்து சென்றார். உடல் சோர்ந்தது. கைகால்கள் கலகலத்தன. பசி தாஹம் வாட்டிற்று. என்ன நேர்ந்தாலும் கைலை செல்வேன் என உறுதி கொண்டு மேலே சென்றார். கால் தேய்ந்து புண்ணாயிற்று. தவிழ்ந்து சென்றார். முழங் காலும் கைகளும் புண்ணாயின. மார்பால் நீய்ந்து சென்றார். மார்பிலும் ரத்தம் பெருகி எலும்பும் தேய்ந்தது. ஆனால் அவர் மேல் செல்வதை நிறுத்தவில்லை. கருணைக்கடலான கைலாஸ நாதன் அந்தணராகி அருகே வந்து நீ யார்? எங்கு செல்கிறாய்? என வினவினார். அவரது ஸன்னதியால் சிறிது பேச சக்தி உண்டாயிற்று. தனது விருப்பத்தைக் கூறினார் அப்பர்.

இந்நிலையில் நீ எப்படிச் செல்வது? என்று கூறி அவரும் மறைந்தார். அப்பர் தமக்குக் கைலை கிட்டாதோ! என வருந்த, அவர் உடல் முன்போல் பலமுள்ளதாயிற்று. ''மற்றும் சில நாள் தென்னாட்டில் இருந்து பல பக்திப் பாடல்களைப்பாடி பின்னர் கைலை வரலாம். இந்த நீரில் முழுகு'' என ஒரு அசரீரியான சொல்லைக் கேட்டு முழுகினார். தான் உடனே திருவையாற்றிலிருப்பதைக் கண்டு இது இறைவனிட்ட கட்டளை என உணர்ந்தார் அங்கே கைலாஸத்தைக் கண்டு மகிழ்ந்தார். ஆதலின் திருவையாறு போன்ற சில தலங்கள் தென் கைலாஸம் எனப்படுகின்றன.

கைலை சென்ற அப்பர் வந்ததைக் கேட்டு அவரைக் காணவிரைந்தார் ஸம்பந்தர். அவரை வரவேற்க அப்பர் விரைந்தார். இருவர்களையும் சூழ்ந்து எண்ணிலா அடியார்க்கூட்டம் குவிந்தது. ஸம்பந்தர் இறைவன்

அளித்த முத்துப்பல்லக்கில் ஏறி வந்தார். பல்லக்கில் இருந்தபடியே அப்பரைக் காண அவா கொண்டு "அப்பர் எங்குற்றார்? என்றார் ஸம்பந்தர்" "தங்கள் பல்லக்கைத் தாங்கும் பேறு பெற்று இங்குற்றேன்" என்றார் அப்பர். கூட்டத்தில் புகுந்து தன் பல்லக்கைச் சுமக்கிறார் இவர் என உணர்ந்து கீழே இறங்கி அபசாரம்! அபசாரம்! அப்பரே என தழுவினார். இருவரும் சேர்ந்து பல தலங்கள் சென்று பாடினர்.

பெண்ணையும் பொன்னையும் மண்ணெனக்கருதினார். அப்பர் புற்பூண்டுகளைச் செதுக்குமிடத்தே பொன்னும் நவரத்நங்களும்தோன்றின. அவைகளைக் குப்பையுடன் சேர்த்து தூரே எறிந்தார். ரம்பை ஊர்வசி முதலியவர் அருகேவந்து ஆடிப் பாடி மயக்கினர். மாய வலையில் சிக்கவில்லை. சித்திரை மாதம் சதயநக்ஷத்திரத்திலே பூம்புகலூர் மேவிய புண்ணியனே என்று கூறிக் கொண்டே பூத உடலை விட்டு கைலை சென்றார்.

## 23. குலச்சிறை நாயனார் (குலபக்ஷ)

மணமேற்குடி (ஸௌர போத்ரகுடி) என்ற ஊரிலே தோன்றியவர் இவர். ஒழுக்கத்தாலும் கல்வியாலும் பாண்டிய தேசத்தரசனை கூன்பாண்டியனுக்கு மந்திரியானார். அரசன் சமண மதத்தில் புகுந்து குடிகளை வலுவிலே சமணராக்கினான். சைவம் பேச முட்டு கேட்க முட்டு என கட்டளையிட்டான். (முட்டெனில் தடை.) அச் சமயத்திலும் அவன் மந்த்ரியான குலச்சிறையும் அரசனது மஹிஷியும் மாத்ரம் சைவர்களாயிருந்தனர். க்ஞான சம்பந்தரை அழைத்து சமணருடன் வாதம் செய்வித்தனர். தோல்வியுற்ற சமணரைக் கழுவேற்றினார் மந்த்ரி. சிவனடியாருக்குப் பெருந்தொண்டு செய்து வந்தார். சிவனருளுக்குப் பாத்ரமாகி கைலை சென்றார். த்ருடமான சிவபக்தி கொண்டு அரசனால் வரும் கடுமையான சிக்ஷையைக் கனவிலும் நினையாதவர்.

---

# பாணிக்ரஹணம்.

பாரதகேஸரி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

பூரு வம்ச திலகன் துஷ்யந்த மஹாமன்னன் கொலு வீற்றிருந்தான். பெரியோர்கள் நிறைந்த அம் மன்னனின் மாஸபையில் ஒருநாள் ஒரு யுவதி கையில் பிடித்த சிறு பாலகனுடன் தைரியமாக நுழைந்தாள். தயங்கித் தயங்கி, நாணமுடன், தூண்களின் மறைவில் நின்று கொண்டு, தன் புதல்வனை அரசன் எதிராக அனுப்பினாள். கூப்பிய கையுடன், விழித்த கண்களுடன் அதிசயம்கொள அரசனை நோக்கி எதிர் நின்றான் சிறுவனும். இணையிலாத அழகும், லக்ஷ்மியைப் போல காந்தியும், தபஸ்வினியைப் போலத் தோற்றமும் கொண்ட அவ் வனிதையையும், அவளது பாலகனின் பிரகாசமான முகப் பொலிவையும் கண்டு புகழாதவர் யாரும் அங்கிலர். மன்னன் மதி கலங்கி சிறிது நேரம், சிந்தனையில் ஆழ்ந்து, பிறகு பேசினான். "பெண்ணே, நீ யார்? உனக்கு இங்கு வேண்டியது என்ன? புத்ரனுடன் வந்திருக்கிறாய். விருப்பத்தைத் தெரிவிக்கலாம்." அப்பெண் இதைக் கேட்டுத் திடுக்கிட்டாள்.

"அரசே, இது என்ன கேள்வி? இப் பிள்ளை உம்முடைய புத்ரன். நான் உம்முடைய தர்ம பத்னி. இதை மறந்தீரா? கண்வருடைய ஆசிரமத்தில் வளர்ந்த சகுந்தலையை மறந்து விட்டீரா? விசுவாமித்திரருக்கும் மேனகைக்கும் தோன்றிய என்னைத் தனியே விட்டுச் சென்ற என் தாய் தந்தைகளிடமிருந்து, என்னை லாலனை செய்து வளர்த்தன சகுந்தபக்ஷிகள். அதனால் சகுந்தலை ஆனேன். பிறகு கண்வரால் கண்டு வளர்க்கப்பட்ட தவச் செல்வி யானேன். என்னை ஒரு நாள் கண்வர் ஆசிரமத்தில் கண்ட தாங்கள் என்னை விரும்பி காந்தர்வ

---

*20உ ஒரு நாள் அச்வத்த ப்ரதக்ஷிணம் செய்*

விதிப்படி விவாகம் செய்து கொண்டதும், எனக்குப் பிறக்கும் பிள்ளைக்கே அரசளிப்பேன் என்று உறுதிமொழி சொன்னதும் தங்கள் நினைவில் இன்று நிற்கவில்லையா ? தருமம் பிசகாத தாங்கள் இதோ உம்முடைய பிள்ளையையும், பார்யையான என்னையும் தயவுடன் ஏற்று, தங்கள் ஸத்யத்தைக் காப்பாற்றும் '' என்ருள்.

சகுந்தலையின் மொழி கேட்ட துஷ்யந்தன் கோபத்தால் சீறினன். ''இதென்ன பேதமை? நீ யார்? நான் யார்? உனக்கும் எனக்கும் என்ன ஸம்பந்தம்? நெறி தவறி நடப்பவன் நான் அல்லன். செல்லலாம் '' என்ருன்.

மன்னவன் சொல்லால் கோபமும் தாபமுமடைந்த சகுந்தலை தன்னுடைய நிலையை, தரும சாஸ்திரங்கள் துணைகொண்டு தானே வாதித்து வெற்றி பெறுகிருள். அதைச் சிறிது கேட்போம்.

அரசே! அரசணையில் வீற்றிருக்கும் தாங்கள் யாருக்கும் பயந்தவர் அல்ல. வாஸ்தவம். ஆனல் ஓர் உண்மையை மறைக்கிரேமே என்ற பயம் கூடவா இப்பொழுது இல்லாமல் போய்விட்டது? உன்னை நான் அறிந்ததில்லை என்பது சாதாரண மனிதர்கள் சொல்லக் கூடியது. உத்தம ராஜலக்ஷணங்கள்கொண்ட தாங்கள், அதுவும் தரும பரிபாலனம் செய்யும் தாங்கள், முன்னுளில் கொடுத்த ஓர் உறுதிமொழியைப் புறக்கணிப்பது என்பது அறவே பொருந்தாது. ஆனல் நீரோ அரசன். நீர் எது பேசினலும், பலரும் ஆமோதிக்கலாம். ஸத்யத்தை, அஸத்யமாக்கி, உங்களுக்கு அனுகூலமாக்கலாம். இதனல் நீர் வெற்றி பெற்றதாகி விடாது.

பாவம் செய்கிற ஒவ்வொருவனும் முதலில் எந்தப் பாபத்தையும் பிறர் முன்னிலையில் தொடங்குவதில்லை. நம்மை யாரும் பார்க்கவில்லை என்று துணிந்தே பாவத்

தைச்செய்ய முற்படுகிருன். அந்த சமயம் அவன் நினைவுகொள்ள வேண்டியது ஒன்றுண்டு. நாம் உடலால் எதைச் செய்யினும், உளத்தால் எதை நினைப்பினும், வாக்கின் வழியால் எது கூறினுலும், உள்ளே நம்மிடத்திலேயே இருக்கிற ஒருவன் அதை ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருக்கிருன். அவன் இல்லாத இடம் இல்லை. அவன் அறியாதது ஒன்றுமில்லை. அவனே பரமாத்மா. தோன்றும் சூரிய சந்த்ரர்கள், பஞ்சபூதங்கள், இவைகளில் பரவி எங்கும் விளங்குகிறவன்.

சூரியன் சந்திரன் முக்கிய ஸாக்ஷி. ஆகாசம், காற்று, அக்னி, ஜலம், பூமி, பகல், இரவு, ஸந்தியா காலங்கள் இவைகள் யாவும் மௌன ஸாக்ஷிகள். இவைகளைக் காட்டிலும் மறக்கமுடியாத முக்கிய சாக்ஷி ஒன்றுண்டு. அது நம்முடைய மனமே. களவு செய்தவனை இம்மையில் நினைவில் உறுத்துவது இந்த மனநிலையே. இதையும் புறக்கணித்துத் திரிபவன், முன்பு சொன்ன பஞ்சபூத ஸாக்ஷிகள், தேவதைகள் வாயிலாக மறுமையில் தண்டிக்கப்படுகிருன். இந்த நியதியை அரசே! நீங்கள் அறியாததா? அறிந்தும், ஏன் உம்மையே நீர் ஏமாற்றிக் கொள்ளுகிறீர்?

என்னை ஒரு அனுதை என்ருே, பொருளுக்காக வந்தவள் என்ருே எண்ணிப் பேசிவிட்டீர். தங்களிடம் பேச எனக்கு இடம் தந்தது, பாதிவ்ரத்யம் என்னும் என்னுடைய தபஸே. பேசும் இடமோ என் பதியின் முன்னிலையில். பேசுவது என் பதியிடம். பேசவந்த காரணமோ, மறைந்த ஸத்யத்தை வலியுறுத்திப் பாதுகாக்கச் செய்யவே யாகும். ஆதலின் என்னை ஏசுவது என்பது பொருந்தாது. அதற்கு மாருக மனைவியாக வந்தவளின் மாண்பைச் சிறிது கேளும்.

ஒரு புருஷனே தன் பத்னியின் கர்ப்பத்தில் புகுந்து, தானே மறுபடியும் ஜனிக்கிருன் என்பதால், மனைவியை

'ஜாயா' என்று அழைக்கின்றனர். இம் மனைவியினால் ஒருவன் ஸந்ததியும் கிருஹ தருமங்களையும் அடைகிறான். உயிருக்கு உயிராகிய கணவனிடம், எல்லா வகையிலும் உற்ற துணையாகி இருப்பவள் பாரியை ஒருவளே. பாரியையை அடைந்தவன் தான் இவ்வுலகில் கிரியைகள் செய்யத் தகுதியடைகிறான். இனிய மொழி பேசும் பாரியை, வாழ்விலும் தாழ்விலும் ஒருவனுக்கு உண்மையான பந்து. பாரியையே நிறைந்த ஸம்பத்து. ஆதலின் எக்காரணத்தாலும் பாரியையை அனாதரவு செய்வது கொடிய பாவம் அன்றோ !

ஒரு பதிவிரதை தன் பர்த்தாவை என்றும் விட்டுப் பிரியத் துணியாள். தான், தன் பதிக்கு முன்னே இறந்து போனாலும், தன் கணவனுக்காக பரலோகத்தில் காத்திருந்து பிறகு அவன் எங்கு இருப்பினும், அவனைப் பின்பற்றுகிறாள். துர்க்கதி அடைந்த கணவனையும் தன் தவத்தால் காப்பாற்றி ஸ்வர்க்கம் செலுத்துகிறவள் பாரியையே. அதனால்தான் பாரியையை ஸ்வர்க்கம் செலுத்தும் ப்ராய்ய கட்டுச் சாதம் என்று சொல்லுகின்றனர். ஆதலின் பாரியை ஒரு பொழுதும், அவமதிக்கவோ, விடத்தக்கவளோ அல்லள். இதை அறிந்து தான் பெரியோர்கள் "பாணிக்ரஹணம்" என்ற முறையைக் காட்டியிருக்கிறார்கள். (தொடரும்)

---

**கோபிகா கீதமும் பஜகோவிந்தமும்:** [மாம்பலம் குருகுலவெளியீடு. 27 ந. பை. ஸ்டாம்பு அனுப்பிப் பெறலாம்.] *நமது குருகுல மாணவர்க்காக தமிழ் எழுத்தில் அர்த்தத்துடன் வெளியானது. ஸ்ரீ ஜகத்குரு முன்னிலையில் குருகுல மாணவர் பாடி அநுக்ரஹம் பெற்ற நூல். சிறுவர்க்கு கட்டாயம் பாடம் செய்வித்து பாடச் சொல்லிக் கேட்டால் ஆநந்தம் பெறலாம். குறைந்தபக்ஷம் ஒவ்வொரு சிறுவரும் இவைகளையாவது கற்கவேண்டும். இல்லற இன்பம் பக்தி வைராக்ய மளிக்க இந்நூல் ஒன்றே போதுமானது. பொருளறிந்து பாடினால் மநமுருகும். "பகவத்கீதா கிஞ்சிததீதா" என்ற சுலோகத்தைக் கூறிக் கூறி ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ரஸித்து ஆநந்தப் பரவசமானார்கள்.*

---

***23, 24வ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்***

23. कन्दर्प दर्पहर सुन्दर दिव्यमूर्ते
कान्ता कुचाम्बुरुह कुड्मल लोलदृष्टे ।
कल्याण निर्मल गुणाकर दिव्यकीर्ते
श्री वेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

கந்தர்ப தர்பஹர ஸுந்தர திவ்யமூர்தே
காந்தா குசாம்புருஹ குட்மல லோலத்ருஷ்டே ।
கல்யாண நிர்மல குணாகர திவ்யகீர்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ॥

**कन्दर्प दर्पहर सुन्दर दिव्यमूर्ते** கந்தர்ப தர்பஹர ஸுந்தர திவ்யமூர்தே - மன்மதனின் மமதையைப் போக்கடிக்கின்ற அழகிய சிறந்த ரூபத்தை உடையோனே! **कान्ताकुचाम्बुरुह कुड्मल लोलदृष्टे** காந்தாகுசாம்புருஹ குட்மல லோலத்ருஷ்டே-மனைவியின் ஸ்தனங்களாகிற தாமரை மொக்குகளில் மிக்க விருப்பமுள்ள கண்களை உடையவனே **कल्याण निर्मल गुणाकर दिव्यकीर्ते** கல்யாண நிர்மல குணாகர திவ்யகீர்தே-அழகியவைகளும் குற்றமற்றவைகளுமான குணங்களுக்கு இருப்பிடமானவனே! சிறந்த நற்புகழையுடையவனே **श्री वेङ्कटाचलपते तव सुप्रभातम्** ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம்-திருமலை நாதனே! உனக்கு நற்பொழுது புலருக.

24. एलालवङ्ग घनसार सुगन्धितीर्थं
दिव्यं वियत्सरिति हेमघटेषु पूर्णम् ।
धृत्वाद्य वैदिक शिखामणयः प्रहृष्टाः
श्री वेंकटाचलपते तव सुप्रभातम् ॥

ஏலாலவங்க கநஸார ஸுகந்தி தீர்த்தம்
திவ்யம் வியத்ஸரிதி ஹேமகடேஷு பூர்ணம் ।
த்ருத்வாத்ய வைதிக ஶிகாமணய: ப்ரஹ்ருஷ்டா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ॥

---

25வ பகவத்கீதை பாராயணம் அல்லது அர்த்தம் படி

**वियत्सरिति** வியத்ஸரிதி - ஆகாச கங்கையில் **हेमघटेषु** ஹேமகடேஷு - தங்கக்குடங்களில் **पूर्ण** பூர்ணம் - நிரப்பப் பெற்றதும் **एलालवङ्ग घनसार सुगन्धितीर्थं** ஏலாலவங்க கந ஸார ஸுகந்திதீர்த்தம்-ஏலம், லவங்கம், பச்சைக்கற்பூரம் இவைகளின் நறுமணம் கலந்ததும் உயர்ந்ததுமான நீரை **धृत्वा** த்ருத்வா - (தலைகளில்) சுமந்து **अद्य** அத்ய - இத்தரு ணம் **वैदिक शिखामणयः** வைதிக ஶிகாமணய: - சிறந்த மறையோர்கள் **प्रहृष्टाः** ப்ரஹ்ருஷ்டா: - களிப்புடையவர் களாய் **तिष्ठन्ति** திஷ்டந்தி - நிற்கின்றனர். **श्री वेङ्कटाचलपते तव सुप्रभातम्** ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம்- (முன்போலவே பொருள்.)

25. **भास्वानुदेति विकचानि सरोरुहाणि**
**संपूरयन्ति निनदैः ककुभो विहङ्गाः ।**
**श्री वैष्णवास्सतत मर्थितमङ्गलास्ते**
**धामाश्रयन्ति तव वेंकट सुप्रभातम् ॥**

பாஸ்வானுதேதி விகசாநி ஸரோருஹாணி
ஸம்பூரயந்தி நிநதை: ககுபோ விஹங்கா: ।
ஸ்ரீ வைஷ்ணவாஸ் ஸததமர்தித மங்களாஸ்தே
தாமாஶ்ரயந்தி தவ வேங்கட ஸுப்ரபாதம் ॥

**भास्वान्** பாஸ்வான் - கதிரவன் **उदेति** உதேதி - உதித் துக் கொண்டிருக்கிறன் **सरोरुहाणि** ஸரோருஹாணி - பத் மங்கள் **विकचानि** விகசானி - மலருகின்றன **विहङ्गाः** விஹங் கா: - பக்ஷிகள் **निनदैः** நிநதை: - நாதங்களால் **ककुभः** ககு ப: - திசைகளையும் **सम्पूरयन्ति** ஸம்பூரயந்தி - நிறைக்கின் றன **श्रीवैष्णवाः** ஸ்ரீ வைஷ்ணவா: - திருவைணவர்கள் **सततम्** ஸததம் - எப்பொழுதும் **अर्थितमङ्गलाः** அர்த்திதமங்க ளா: - யாசிக்கப்பட்ட மங்களத்தை உடையவர்களாய்க் கொண்டு **ते** தே - உனது **धाम** தாம - இடத்தை **आश्रयन्ति** ஆஶ்ரயந்தி - அடைகின்றனர் **वेङ्कट** வேங்கட - திருவேங்

---

26வ நன்ருக மூச்சை அடக்கி 5 பிராணுயாமம் செய்

கடவனே **तव सुप्रभातम्** தவஸுப்ரபாதம் ( முன்போலவே பொருள் )

26. **ब्रह्मादयस्सुरवरास्स महर्षयस्ते**
**सन्तस्स नन्दन मुखास्तव योगिवर्याः ।**
**धामान्तिके तव हि मङ्गलवस्तुहस्ताः**
**श्री वेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥**

ப்ரஹ்மாதயஸ் ஸுரவராஸ்ஸ மஹர்ஷயஸ்தே
ஸந்தஸ் ஸநந்தந முகாஸ்தவ யோகிவர்யா: ।
தாமாந்திகே தவஹிமங்கள வஸ்துஹஸ்தா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ॥

**ते** தே-அப்படிப்பட்ட **समहर्षयः** ஸமஹர்ஷய:-மகரிஷிகளுடன் கூடிய **ब्रह्मादयः** ப்ரஹ்மாதய:-நான்முகன் முதலிய **सुरवराः** ஸுரவரா: - சிறந்தவர்களும் **सन्तः** ஸந்த:-ஸாதுக்களாகிய **सनन्दनमुखाः** - ஸநந்தநமுகா: - ஸநந்தனர் முதலிய **योगिवर्याः** யோகிவர்யா: - யோகிச்ரேஷ்டர்களும் **मङ्गलवस्तुहस्ताः** மங்களவஸ்துஹஸ்தா: - சோபனப் பொருள்களைக் கைகளில் ஏந்திக்கொண்டவர்களாய் **तव** தவ - உன்னுடைய **धामान्तिके** தாமாந்திகே - கோயிலினருகில் **सन्ति** ஸந்தி - இருக்கின்றனர். **श्रीवेङ्कटाचलपते तवसुप्रभातम्** ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ( முன்போலவே பொருள் )

27. **लक्ष्मीनिवास निरवद्यगुणैकसिन्धो**
**संसारसागर समुत्तरणैकसेतो ।**
**वेदान्तवेद्य निजवैभव भक्तभोग्य**
**श्री वेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥**

லக்ஷ்மீநிவாஸ நிரவத்ய குணைக ஸிந்தோ
ஸம்ஸார ஸாகர ஸமுத்தரணைக ஸேதோ ।

---

27வ ராமாயண பாராயணம் அல்லது கதை படி

வேதாந்த வேத்ய நிஜவைபவ பக்தபோக்ய
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ॥

**लक्ष्मीनिवास** லக்ஷ்மீ நிவாஸ - திருமகள் உறைவிடமே **निरवद्य** நிரவத்ய - குற்றமற்றவனே **गुणैकसिन्धो** குணைக ஸிந்தோ - குணக்கடலே **संसारसागर समुत्तरणैकसेतो** ஸம்ஸார ஸாகர ஸமுத்தரணைகஸேதோ—பிறவிக்கடலைக் கடத்தற்குரிய ஒப்பற்ற பாலமே **वेदान्तवेद्य निजवैभव** வேதாந்த வேத்ய நிஜவைபவ - உபநிஷத்துக்களால் அறியக்கூடிய தன் வைபவத்தை உடையவனே **भक्तभोग्य** பக்தபோக்ய - அன்பர்க்கினியனே! திருவேங்கடனே! புலருக.

28. **इत्थं वृषाचलपतेरिह सुप्रभातं**
**ये मानवाः प्रतिदिनं पठितुं प्रवृत्ताः ।**
**तेषां प्रभातसमये स्मृतिरङ्गभाजां**
**प्रज्ञां परार्थसुलभां परमां प्रसूते ॥**

இத்தம் வ்ருஷாசலபதேரிஹ ஸுப்ரபாதம்
யேமானவா: ப்ரதிதினம் படிதும் ப்ரவ்ருத்தா: ।
தேஷாம் ப்ரபாதஸமயே ஸ்ம்ருதிரங்க பாஜாம்
ப்ரக்ஞாம் பரார்த்த ஸுலபாம் பரமாம் ப்ரஸூதே ॥

**इह** இஹ - இவ்வுலகில் **वृषाचलपतेः** வ்ருஷாசலபதே:- திருமலைநாதனுடைய **सुप्रभातम्** ஸுப்ரபாதம் - திருப்பள்ளி எழுச்சியை **प्रतिदिनं** ப்ரதிதினம் - நாள்தோறும் **ये मानवाः** யேமானவா: - எம்மனிதர் **प्रभातसमये** ப்ரபாதஸமயே - காலையில் **पठितुं** படிதும் - படிப்பதற்கு **प्रवृत्ताः** ப்ரவ்ருத்தா: - இழிகின்றனரோ **तेषां** தேஷாம் - அவர்களைப்பற்றிய **स्मृतिः** ஸ்ம்ருதி: - நினைவு **अङ्गभाजां** அங்கபாஜாம்-மனிதர்களுக்கு **परार्थसुलभां** பரார்த்தஸுலபாம் - பரம்பொருளையே பயனைக் கருதியவர்கள் மாத்திரமே எளிதில் அடையக்கூடிய **परमां** பரமாம் - உத்தமமான **प्रज्ञां** ப்ரக்ஞாம்- நல்ல அறிவை **प्रसूते** ப்ரஸூதே பயக்கிறது.

ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம் முற்றிற்று.

---

28ஐ ஒழிந்த நாளில் காயத்ரீ பஞ்சாக்ஷரீ 336 செய்



# நவரஸம்.



" அக்ஷயபரணி "

## வானத்தின் உச்சியிலே !

ஆசியாவிற்கெல்லாம் ஒரு அதிசயமாக, சென்னையில் 14 அடுக்குகளோடு விளங்கும் எல். ஐ. ஸி. கட்டிடத்தின் மேல் தளத்திற்கு ஒரு பெரியவரும் அவர் பேரனுமாக ஏறினர்கள். அந்த உச்சியிலிருந்து நாற்புறமும் பார்த்தார்கள். குனிந்து கீழே பார்த்த சிறுவன் " அப்பப்பா ! இந்தத் தெருவிலே சற்று முன்னர் பார்த்த ராக்ஷஸ பஸ்கள், லாரிகள் இவையெல்லாம் ஏதோ கொலு பொம்மைகள் போல் தெரிகிறதே ! " என்று வியந்தான். ஆமாம் ! அங்கிருந்து பார்த்தால் மாட மாளிகைகளெல்லாம் 'மாடல்' வீடுகள் மாதிரிதோன்றும். ஏன் ! ஸென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து கிளம்பும் ரயில்களெல்லாம் பொம்மை வண்டிகளாகிவிடும் ! இந்த காட்சிகளெல்லாவற்றையும் கண்டு களித்த அந்த புத்திசாலிப் பேரன், ஆகாயத்தையும் நிமிர்ந்து பார்த்தான். அவனுக்குச்சற்று ஏமாற்றமாகி விட்டது. கீழே இருந்து பார்த்த போது வானம் எவ்வளவு உயரமாயிருந்ததோ அதே உயரத்தில் தான் இந்த மேல் தளத்திலிருந்து காணும் போதும் இருக்கிறதே என்று வேதனைப்பட்டான். அது மாத்திரமல்ல ! இன்னொரு விநோத சிந்தனையும் அவனை ஆட்கொண்டது. கேட்கிறன் பெரியவரை ! " என் தாத்தா ! இவ்வளவு உயரத்திலிருந்து பார்க்கும்போது கீழே இருப்பவையெல்லாம் விளையாட்டுப் பொம்மைகள் போல் தெரிகிறதே ! அதோ ! எட்டவே முடியாத ஆகாயத்திற்கும் அப்பாலிருக்கும் ஸ்வாமிக்கு நம்மையெல்லாம் பார்த்தால் எப்படித் தோன்றும் ! "

சிறுவன் கேட்ட கேள்வி பெரியவரின் மனதில் ஒரு தத்துவ விசாரணையை எழுப்பி விட்டது. நாமும், நமது செயல்களும் பிரும்மாண்டத்தின் நாயகனை ஈஸ்வரனின் முன்னிலையில் எம்மாத்திரம் ? அவன் எவ்வளவு பெரியவன் என்று சிந்தித்துப்பார்த்தால் நாம் செயல் மாண்டு ஒடுங்கத்தானே வேண்டும் ?

---

**29வ நம் குலத்தவர் என்ன தர்மம் செய்தாரென யோசி**

## எப்படிப் பெரியவன்!

"பெரியவன் ஆண்டவன்" என்றுசொன்னால் போதுமா? ஏனைய பொருள்களோடு ஒப்பிட்டுப் பார்த்தல்லவா தெளியவேண்டும்! இந்தக் காரியத்தை நமக்குச் சுலபமாக்கிக் கொடுக்கிறது ஸ்ரீமந் நாராயணீயம்! ஸ்ரீ நாராயண பட்டத்ரி அவர்கள் சில குணங்களை எடுத்து நமக்கு முன் போட்டு, இந்த புவனத்திலோ, அல்லது மூன்று உலகங்களிலோ, அல்லது நமது புத்தியின் கூர்மை எட்டிப்பாயும் எல்லா இடங்களிலுமோ - தேடித் துருவிச் "சிறந்தது இது, இதைவிடச்சிறந்தது கிடையாது" என்று நிச்சயித்து ஒன்று கூடிச் சொல்லுங்கள்! பிறகு வாருங்கள் என்னிடம்! என்று ஏவல்விடுகிறார்! மஹத்துவம் கவர்ச்சி, காந்தி, இனிமை, அழகு—இத்தகைய குணங்களில் சிறந்தது இது என்று நாம் போய் ஒன்றைச் சொன்னால் அதைவிடச் சிறந்தது இது என்று ஒன்றை ஸ்ரீ பட்டத்ரி காட்டுகிறார்!" மஹத்துக்கெல்லாம் மஹத்தானது! கவரக்கூடிய பொருள்களையெல்லாம் காட்டிலும் கவர்ச்சி உடையது! காந்தியின் இருப்பிடத்தைக் காட்டிலும் காந்தி யுற்றது! இன்பத்தைக் காட்டிலும் இன்பமானது! அழகுக்கெல்லாம் ஒரு அழகு!" எதைச் சொன்னாலும் அதற்குமேல் ஒன்று சொல்கிறாரே என்று ஆச்சரியப் படுகிறோமா! அதற்கும் பதில் தருகிறார்! ஆச்சர்யமானதையெல்லாம் காட்டிலும் ஆச்சர்யமானதாம் அவர் காட்டும் பொருள்! அந்தப் பொருள் தான் என்ன? வேறு யாரைக் காட்டுவார் ஸ்ரீ பட்டத்ரி! கலியுக வரதனாய் விளங்கும் ஸ்ரீ குருவாயூரப்பனைத்தான்!

यत्त्रैलोक्य महीयसोऽपि महितम् सम्मोहनं मोहनात्
कान्तम् कान्ति निधानतोऽपि मधुरं माधुर्यधुर्यादपि ।
सौन्दर्योत्तरतोपि सुन्दरतरं त्वद्रूपमाश्चर्यतोऽपि
आश्चर्यं भुवने नकस्य कुतुकं पुष्णाति विष्णो विभो ॥

யத்ரைலோக்ய மஹீயஸோபி மஹிதம்
ஸம்மோஹனம் மோஹனாத் ।

30உ மறுபிறவிக்கு என்ன புண்யம் செய்தோமெனகவனி

காந்தம் காந்தி நிதா[4]னதோபி மது[4]ரம்
மாது[4]ர்ய து[3]ர்யாத[3]பி |
ஸௌந்த[3]ர்யோத்தர தோபி ஸுந்த[3]ரதரம்
த்வத்[3]ரூபம் ஆஶ்சர்யதோபி ஆஶ்சர்யம் |
பு[4]வனே நகஸ்ய குதுகம்
புஷ்ணாதி விஷ்ணோ விபோ[4] ||

## சற்று எழுதலாமா !

பொதுவாகப் "பெரியது பெரியது" என்று முழங்கி விட்டால் போதுமா? நம்மைப் படைத்தவனின் இயல்பை முற்றும் புரிந்து கொள்ள வேண்டாமா? "அவன் எத் தகையவன்? அவன் குணங்கள் யாவை?" என்றெல் லாம் வரையறுத்துக் கூறவேண்டாமா? வேண்டாம்! வேண்டவேவேண்டாம்! என்று தடுக்கிறது, ஶிவமஹிம்ந ஸ்தோத்ரம்! ஏன் தெரியுமா? பெரிய பெரிய ஏற்பாடு களெல்லாம் செய்து பார்த்தும் முடியாது என்று கைவிட்ட வேலையாமிது! ஒரு சமயம் நீலமே நிறமான மலைகளெல்லாம் எடுத்து அலைகடலில் போட்டுக் கரைத் தார்களாம்! கடல் முழுவதும், எழுதுவதற்கு உபயோக மாகும் மை (Ink) ஆகிவிட்டதாம்! எழுதுகோல் வேண் டாமா? எழுத எழுத நுனி மழுங்காத கற்பக விருக்ஷத்தின் பெரியகிளையொன்றை எழுதுகோலாக்கி, அகண்ட பூமி யையே காகிதமாக்கிக் கொண்டார்களாம்! தங்கு தடை யின்றி மேதா விலாஸத்தோடு எழுதுவதற்குக் கலைவாணி யான ஸரஸ்வதியே நியமிக்கப்பட்டாளாம்! "எத்தனை காலத்திற்குள் எழுதி முடிக்க வேண்டும்?" என்று கேட்டதற்கு, "முடிந்தால் எழுதி முடியும் வரை," என்றும் கூறி விட்டார்களாம்! என்ன ஆயிற்று? "ஏ, சர்வேஸ்வரனே! அப்படியும் உன் குணங்களை எழுத முடியவில்லையப்பா!" என்று கடைசியில் தோல்வியை ஒப்புக்கொண்டு கைவிட்டு விட்டார்களாம்!

அஸித[3] கிரி ஸமம் ஸ்யாத் கஜ்ஜலம் ஸிந்து[4] பாத்ரே
ஸுரதரு வர ஶாகா[2] லேக[3]னீ பத்ர முர்வீ

---

31வ மாதம் ஒரு நாள் நம் ஊரிலுள்ள பந்துக்களை ஸந்தி

லிக³தி யதி க்³ருஹீத்வா ஶாரத³ா ஸர்வகாலம்
த³தபி தவகுணௌம் ஈஶ பாரம் நயாதி ||

## பாட்டி சொல்கிருள் !

*பேரன் கேட்ட கேள்விக்குப் பதில்சொல்ல அல்லவா இவ்வளவு தூரம் வந்து விட்டோம் ! பாவம் ! ஆண்டவன் இவ்வளவு பெரியவனு என்று மலேத்து நிற்கும் பேரனுக்கு சரியான திருப்தி தரும் பதிலே ஒரு பாட்டியால் தான் அளிக்க முடியும் ! பாட்டி சொல்கிருள்:– " அப்பனே! பகவான் மிகவும் பெரியவன்தான்! ஆனல் அவனே சதா நம் மனதில் நினேத்து நிறுத்தி வந்தால் நாம் தான் அவனேயும் காட்டிலும் பெரியவர்கள்" ! இப்படித் தைரியமாகச் சொன்னவள் சாதாரணப் பாட்டியல்ல! ஔவைப் பிராட்டிதான் !*

| | | |
|---|---|---|
| பெரிது பெரிது | புவனம் | பெரிது |
| புவனமோ | நான்முகன் | படைப்பு |
| நான்முகனே | கரியமால் | உந்தி வந்தோன் |
| கரிய மாலோ | அலேகடல் | துயின்ருேன் |
| அலேகடலோ | குறுமுனிகையில் | அடக்கம் |
| குறுமுனியோ | கலசத்தில் | பிறந்தோன் |
| கலசமோ | புவியில் | சிறு மண் |
| புவியோ | அரவினுக்கு | ஒரு தலேப்பாரம் |
| அரவோ | உமையவள் | சிறு விரல் மோதிரம் |
| உமையோ | இறைவர் | பாகத்து ஒடுக்கம் |
| இறைவரோ | தொண்டர் | உள்ளத்து ஒடுக்கம் |
| தொண்டர் | தம் பெருமை | சொல்லினும் பெரிதே ! |

*( கரியமால்-மகாவிஷ்ணு ; உந்தி-நாபி , குறுமுனி-அகஸ்தியர் , அரவோ - ஆதிசேஷனே )*

---

*32உ ஸந்த்யை மந்த்ர அர்த்தமென்ன ? என்று விசாரி*



# ஆயுஷ்காமியம்.

வைத்தியப் பகுதி.

'' ஸ்வஸ்திஸ்ரீ ''

## ஜீர்ணாக்னிகளும் தாதுபரிணாமமும்

**अच्युतानन्त गोविन्द नामोच्चारणभेषजात् ।**
**नश्यन्ति सकला रोगाः सत्यं सत्यं वदाम्यहम् ॥**

'' அச்யுத, அநந்த, கோவிந்த என்கிற நாமங்களைச் சொல்லுதலாகிய மருந்தினால் எல்லா நோய்களும் உண்மையில் நாசமடைகின்றன. நான் ஸத்யமாகச் சொல்லுகிறேன். இது மஹரிஷி வாக்யம். ஸத்யம் ஸத்யம் என இருதரம் சொல்லுகிறார். வைதிக நெறியிலுள்ள யாவரும் அச்யுத அநந்த கோவிந்த என்று பலதரம் திநமும் ஆசமனத்தில் சொல்லுகிறார்கள். இவர்களுக்கு ஸகல வியாதிகளும் நாசமடைகின்றனவா? என்று கேட்கலாம். ஆம். சரியான மனோபாவனையுடன் இந்த நாமங்களைச் சொல்கிறவர்களுக்கு ஸகல வியாதிகளும் நசிக்கின்றன என்றே கூறலாம்.

சரியான மனோபாவனை என்பது என்ன என்பதைத் தெளிவாக உணர வேண்டும். சித்தவிருத்திகள் அடங்கி மனம் ஒருமை நிலை அடையும் போது சரியான மனோபாவனை ஏற்படுகிறது. இதற்கு தேக சுத்தி அவசியம். ஜீவநதிகளோ பெரிய நீர்நிலைகளிலோ பிராதஸ்நானம் செய்வதால் தேகத்தின் வெளிப்புற சுத்தி ஏற்படும். உட்புற சுத்திக்கு ஆகார நியமங்கள் பயன்படுகின்றன.

அது எப்படி எனில் உயிருள்ள எல்லா பிராணிகளிலும் அதிலும் மனித தேகத்தில் உடற்சூடு (அக்னிகள்) எப்போதும் இருந்து வருகின்றது. அது தினமும் நாம் உட்கொள்ளும் ஆகாரத்தால் உண்டாக்கப்பட்டு அந்த ஆகாரத்தை ஜீர்ணிக்க உதவி தானும் அதனால் விருத்தி அடைகிறது. இத்தகைய தேகாக்னிகளை அடக்கி சமமான நிலையில் வைத்தால்தான் சரியான மனோபாவனை உண்டாகும். இது பற்றியே வைதிக கர்மாக்கள் எல்லாவற்றிலும் ஆகார நியமங்கள் விதித்துள்ளன. ஏகாதசி உபவாஸமும் மறுநாள் அதிகாலையில் துவாதசி பாரணையும் ஜீரணாக்னிகளின் பாதுகாப்பின் பொருட்டேயாம். காத்தல்

---

**இவைகளில் என்று எது முடியுமோ அதைச் செய்.**

கடவுளாகிய மகா விஷ்ணுவே (கிருஷ்ண பகவானே) இதற்கு அதிதெய்வமாகக் கருதப்படுகிருர்.

**अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।**
**प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥**

(கீதை 15 வது அத். 14 வது ஶ்லோகம்) நான் வைஶ்வானராக்னியாக ஆகி பிராணிகளுடைய சரீரத்தில் புகுந்து பிராணுபானங்களுடன் கூடியவனுய் நான்கு வகைப்பட்ட அன்னத்தை ஜீர்ணமாக்கிறேன்.

இந்த அக்னிகள், ஜாடராக்னி, பஞ்ச பூதாக்னிகள் ஸப்ததாத்வாக்னிகள் என பதிமூன்று வகைப்படும். இவை அனைத்திலும் ஜாடராக்னியே மேலானது. அது உட்கொண்ட ஆகாரத்தை முதலில் பசனம் செய்யும். மற்றெல்லா அக்னிகளுக்கும் மூலாதாரமானது. அவைகளெல்லாம் இதன் விருத்தி கூடிய சம நிலைக்கு ஏற்றவாறே இருந்து வரும். ஆகையால் சரியான முறைப்படி ஹிதமான அன்னபானங்களாகிய விறகுகளால் வெகு கவனத்துடனும் ஊக்கத்துடனும் இந்த அக்னியைக் காத்து வரவேண்டும். ஏனெனில் "அக்னி மூலம் பலம் பும்ஸாம், பல மூலம் ஹிஜீவிதம்" (மனிதர்களுக்கு தேக வலிமை ஜாடராக்னியை முக்ய ஆதாரமாக உடையது. அவர்கள் ஜீவித்து சுகமாக வாழ்வதற்கு உடல் வலிமை மூலகாரணமாகும்.)

நமது தேகத்தில் ஹிருதயத்திற்கு மேல் ஸோமனுக்கும் கபதோஷத்திற்கும் இருப்பிடமாகவும் ஹிருதயத்திற்கு கீழ் நாபிக்கு மேல் சூரியனுக்கும் பித்தத்திற்கும் இருப்பிடமாகவும் நாபிக்குக் கீழ் அக்னிக்கும் வாதத்திற்கும் இருப்பிடமாகவும் கருதப்படுகிறது. இவ்விடங்களில் ஜாடராக்னி விசேஷமாய் மத்யபிரதேசத்தில் ஸமான வாயுடன் இருந்து கொண்டு தன் செயலைப் புரிகின்றது. ஸமானவாயு அதை சமநிலையில் ஒழுங்காக வைத்திருக்க உதவியாகிறது. ஜாடராக்னியின் செயல் வாயின் உமிழ் நீரிலும் சிறிது இருக்கின்றது.

நாம் உண்ட உணவு வாயில் உமிழ் நீருடன் கலந்து பிராண வாயுவால் முதலில் குடலின் ஆமாசயம்

---

என்ற பாகத்திற்குக் கொண்டு வரப்படுகிறது. இங்கு ஸமான வாயுவால் தூண்டப்பட்ட ஜாடராக்னி அன்னபானத்தைப் பசனம் செய்ய தொடங்குகிறது. இதனுல் அறுசுவைக் கொண்ட வஸ்த்துக்கள் மது ரஸம் மேலிட்டு நுரையுடன் கபத்தின் தன்மையை அடைகின்றது. இம்மாறுதல் முடியும் வரை உணவு ஆமாசயத்திலேயே கிரஹிக்கப்பட்டு அதற்கு கீழே போகாமல் தடுக்கப்படுகிறது. எனவே இந்த இடத்திற்கு கிரஹணி எனப்பெயர் வந்தது. கிரஹணியால் ஜாடராக்னிக்கு வலிவு. ஜாடராக்னியால் கிரஹணிக்கு வலிவு. (இவற்றில் ஏதாவதொன்று கோளாறு அடைந்தால் உண்ட உணவு வயிற்றில் கிரஹிக்கப்படாமல் பேதியாகிவிடும். இந்த ரோகத்திற்கும் கிரஹணி என்று பெயர்.)

ஜாடராக்னி மேலும் ஜீரணம்செய்யும்போது உணவு அம்லத் தன்மை பெற்று பித்தத்துடன் கூடி ஆமாசயத்தினின்று நெகிழ்ந்து சிறுகுடலுக்கு வந்து பித்தத் தன்மையைப் பெறுகிறது. அப்பால் பக்வாசயம் என்ற சிறு குடலின் பாகத்தில் ஜாடராக்னியின் செய்கையால் அன்னம் கடுரஸத்தையும் வாதத்தன்மையையும் பெறுகிறது.

இவ்விதமாக முத்தோஷத்தன்மையை அடைந்த அன்ன ஸாரத்தை பார்த்திவ, ஆப்ய, ஆக்னேய, வாய்வ்ய, நாபச (ஆகாய) என்ற பஞ்ச பூதாக்னிகள் முறையே அந்தந்த பூதங்களின் குணும்சங்களைப் பெறும்படி பக்குவம் செய்கின்றன. ஏனெனில் தேகத்தில் பார்த்திவாம்சங்கள் பார்த்திவாம்ச குணங்களைப் பெற்ற அன்னஸாரத்தால் தான் போஷிக்கப் படுகின்றது. இவ்விதமாகவே மிச்சமுள்ள பூதாம்சங்களும் அவ்வவற்றின் பூதகுணும்சங்களைக் கொண்ட ஸாராம்சத்தால் போஷிக்கப்படுகின்றன. பக்வாசயத்தில் நடைபெறும் இம்மாறுதலில் உணவானது, கிட்டம், ஸாரம் என்று முக்யமாய் இரண்டு விதமாகப் பிரிகின்றது. ஸாரம் மேற்கொண்டு தாதுக்களாக பரிணமிக்க வேண்டிய ஸத்வ பாகம் ஆனதால் தேகத்தில் பரவ ஆரம்பிக்கிறது. கிட்டம் கழிவுப் பொருள். அதன் திரவாம்சம் மூத்திரமாகவும், திப்பியாகிய கெட்டிப் பிரிவு மலமாகவும் வெளிவருகின்றன.

---

**மாதாமாதம் இச்சிறு தர்மத்தை அநுஷ்டி**

## தார்மிகச் செய்திகள்.

**அமர பாரதீ பரீக்ஷா ஸமிதி:** 10-4-60ல் ஸம்ஸ்கிருதத்தில் தேரிய மாணவர்களுக்கு தங்கப்பதக்கம் முதலிய பரிசு அளித்தது. இந்த ஸமிதி ஸ்ரீ காஞ்சி ஆசார்யாளின் ஆக்ஞைப்படி பல்லாண்டு களாக ஸம்ஸ்கிருத பாஷைக்காக அரும்பாடு பட்டுவருகிறது.

**ஸ்ரீ சங்கர ஜயந்தி:** சென்னை ஸ்ரீ சங்கர மடம், திருவொற்றி யூர் மடம், பழய மாம்பலம் வைதிக தர்மாபிவர்த்தினீ, பாம்பே ஸ்ரீ சங்கர மடம், மண்டகொளத்தூர், பொன்மலை, பூனா முதலிய விடங்களில் மிகச் சிறப்பாக நடந்தேறியது. ஸ்ரீ ஜகத்குரு காம கோடி பீடாதிபர் திருச்சி நேஷநல் காலேஜில் வித்வத் ஸதஸ்ஸு டன் மிகச் சிறப்பாக நடத்தினார்கள்.

---

## ஸந்தேஹ விளக்கம்.

[சிலர் கேட்பது பொதுவாக எல்லோருக்கும் புரியாததாகவும், பய னில்லாததாகவு மிருக்கின்றது. ஸந்தேஹமே ஸந்தேகமாக இருக் கிறது. அது எது என்பதை விளக்கவே பல பக்கம் தேவையாக இருக்கிறது. ஆதலின் சிலவைகளுக்கு பதில் எழுத முடியவில்லை. மன்னிக்கவும்.] — பத்ராசிரியர்.

R. ராமச்சந்த்ரன், மைலை.

29. ஸபிண்டர் யார்? ஸமாநோதகர் யார்?

பொதுவாக ஒரு மூல புருஷனிடமிருந்து 7 தலை முறை ஸபிண்டர். அடுத்த 7 தலைமுறை ஸமாநோதகர். மற்றவர் ஸகோத்ரர் எனப்படுவர்.

ஒருவருக்கு முன்னே மூன்று பேர் தான் ஒன்று. பின்னே மூன்று பேர். இவர் ஸபிண்டர். இவர்களுக்கு முன்னும் பின்னு முள்ளவர் ஸமாநோதகர் என வைத்ய நாத தீக்ஷிதீயம் கூறுகிறது.

30. சிராத்தத்தில் எந்த பாகக்காயைச் சேர்ப்பது?

மூன்று வகை பாகக்காய்களைச் சேர்க்கலாம் என வைத்யநாத தீக்ஷிதீயம் கூறுகிறது.

---

## சந்தாதாரர்களுக்கு ஓர் விக்ஞாபனம்.

*13ம் ஆண்டு புஸ்தகத்தைத் தொடர்ந்து அனுப்புங்கள், சந்தாவை கூடிய சீக்கிரமனுப்பி வைக்கிறேன் என்று கடிதம் எழுதிய சந்தா தாரர்கள் சந்தாவை அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

*சந்தாவை அனுப்பும்போது சந்தா நம்பரைக் குறிப்பிடுங்கள்.

---

ஒரு நாள் நீர்மோர் ஒருவருக்காவது அளி.

# ஸத்ய வ்ரதன்.

தியாகோப நிஷத்.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

[ஸூர்யமண்டலத்தின் மத்தியில் விளங்கும் பரமாத்மாவின் ஸ்வரூபமே ஸ்ரீ ராமனுக அவதரித்தது என்பதை முன் வந்துள்ள கீர்த்தனத்தில் கண்டோம். ஸத்ய தர்மானுஷ்டானம் இவைகளைத் தானே கடைபிடித்து எல்லோர்க்கும் க்ஷேமத்தைச் செய்த ஸ்ரீ ராமனின் திரு அவதாரத்தை முன் கண்ட கீர்த்தனத்தில் விளக்கியுள்ளார். ''தர்மாத்முடு ஸர்வசமுடு'' என்பதனுல், தர்மஸ்வபீயான பரமன், எல்லாவற்றையும் தன்னுள் அடக்கியவன், தானும் அடங்கியவன், ஜிதேந்த்ரியன் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

கீழ்க்கண்ட கீர்த்தனத்தில் அந்த தர்மானுஷ்டானம், எதை அனுசரித்து முக்கியத்வம் பெற்றுள்ளது என்பதைக்காட்டி, ஸ்ரீ ராமபிரானின் கல்யாண குணங்களின் மிகச் சிறந்த அம்சங்களைப் பாடித் துதிக்கிருர்.]

ராகம்—ஹரிகாம்போதி ] பல்லவி. [ தாளம்—ரூபகம்.

ஒகமாட ஒக பாணமு
ஒகபத்னீ வ்ரதுடே மனஸா — (ஒ)

அனுபல்லவி.

ஒக சித்தமு கலவாடே
ஒக நாடுனு மறவகுவே — (ஒ)

சரணம்.

சிரஜீவித்வமு நிர்ஜர வர
ஸௌக்ய மொஸங்குனே
த⁴ர பரகெடி தேவுடே
தியாகராஜ வினுதுடே — (ஒ)

பொருள் :—

**பல்லவி, அனுபல்லவி :** ஏ மனமே! ஒரே வார்த்தை, ஒரே பாணம், ஒரேபத்னி இவைகளை விரதமாகக்கொண்டவன் ஸ்ரீ ராமச்சந்த்ரமூர்த்தி அன்ருே! (மாறுபடாத)

ஒரே சித்தம் கொண்டவன். இவனை ஒரு நாளும் மறக்காதே (ஏ மனமே!)

**சரணம்:** வெகுகாலம், மூப்பில்லாத சுக வாழ்வை அளிப்பவனான ஸ்ரீ ராமன், இப்புவியில் யாரும் நன்கறிந்த தெய்வமே.

**கருத்து:** 'ஒகமாட' என்பதால் ஸத்யமும், 'ஒக பாணமு' என்பதால் மஹா பௌருஷமும், 'ஒக பத்னீ' என்பதால் ஜிதேந்திரியத்வமும் 'ஒக சித்தமு' என்பதால் சரணாகதவத்ஸலனின் 'ஆந்ருஶம்ஸ்யம்' என்ற காருண்யமும் சொல்லப்பட்டது.

மூப்பற்ற வெகுகால ஸுக வாழ்வு என்பது ஸ்வர்க்க போகம். இம்மையில் சுகம் என்பதும் அதனுள் அடக்கம்.

---

**பிழை திருத்தம்:** சென்ற மாத கீர்த்தனத்தில், அனுபல்லவியில் 'மண்ட மார்த்தாண்ட' என்பதை 'சண்ட மார்த்தாண்ட' எனவும், சரணத்தின் இரண்டாவது அடியில் 'தர்மாத்முடு ஸத்ய ஸந்துடு' என்பதை 'தர்மாத்முடு ஸர்வ சமுடு' என்றும் படிக்கவும்.

## ஸ்ரீ காஞ்சி ஆசார்யாளின் அமிருத மொழி.

நமது மதத்தைக்காக்க ஜபம் அநுஷ்டாந மிவைகளே கத்தி, துப்பாக்கி போலாம். இப்படிப்பட்ட தனிப் பெரியவாள் மூலமே நம் மதம் நின்றிருக்கிறது. கபீர் முதலிய அன்ய மதத்தினர் தானே நம் மதத்தில் வந்து பக்தியால் நற்கதி பெற்றனர். கலியுகம் ஒருவகையில் சிறந்தது. விரைவில் புண்ய பலனைத் தருகிறது. இதில் பெண்களும் நான்காம் வர்ணத்தாரும் பக்தி செய்வோருக்கு உதவி புரிந்து சுலபமாகப் பலனைப் பெருகின்றனர். பத்துமுறையாவது பகவன் நாமாவை எவனாவது ஜபிக்கிறானா? என பகவான் காத்துக்கொண்டிருக்கிறார் பலந்தர. தலைவன் ஒழுங்காக இருந்தால் குடும்பம் க்ஷேமமாக இருக்கும். பிராம்மணன் ஒழுங்காக இருந்தால் பாரததேசம் பழைய சுபிக்ஷ நிலை பெறும்.

பி. சுப்ரமண்ய அய்யர்,
கடகம்.

**ஒரு விசிறி தானம் செய்.**

# ஜோதிஷ தத்துவம்.

ஜோதிஷப் பகுதி.

ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்,
4, கிருஷ்ணயாசாரி தெரு, தி. நகர் சென்னை-17.

**ராமு:–** வேதம், நேற்றைய தினம் ஹோரை, என்று சொன்னாயே அதன் விபர மென்ன ?

**வேதம்:–** கவனமாய்க்கேள் : ஹோரை என்பதுதான் ஜோதிஷ சாஸ்திறத்திற்கே அடிப்படை. இந்த ஹோரை என்பது தினமும் ஒரு மணிக்கொரு தரம் மாறி வருகிறது.

**ரா :** வாரம் என்பதைச் சொன்னாய். வாரத்திற்கும் ஹோரைக்கும் என்ன ஸம்பந்தம் ?

**வே :** ஏழு கிரஹங்கள் ஏழு கிழமைகளாகவே பெயர் பெற்றது போலவே ஏழு கிரஹங்களின் பெயரே தினசரி மணிக்கொன்றாக மாறி நடக்கும்.

**ரா :** அதனால் ஏற்படும் பலன் என்ன ?

**வே :** நம் முன்னோர்கள் " நாள் செய்வது நல்லோர் செய்யார் " என்ற உறுதியால் தினமும் நல்லோரைகளை அனுசரித்தே எதையும் செய்து வந்தார்கள். அதனால் அவர்கள் நிம்மதியாக வாழ்ந்து வந்தார்கள்.

**ரா :** ஹோரை பார்ப்பது எப்படி? அதற்கு ஏதாவது வாய்பாடு வரபடுத்த வேண்டுமா ?

**வே :** ஆமாம், ஆனால் சுலபமானது அதாவது " அர்க்க சுக்ர ஸோமஜ இந்து மந்த ஜீவ மங்கள " இதை உருப்போட்டு தெரிந்துக் கொண்டால் போதுமானது.

**ரா :** ஏதோ புரியாத படி சொல்லுகிறாய்? அதை விவரித்து சொல்லு பார்க்கலாம்.

**வே :** அர்க்க என்றால் சூரியன். சுக்ரன் அதற்கடுத்த ஹோரை. அதற்கடுத்தது ஸோமஜன்-புதன், பின் இந்து என்பது சந்திரன் அடுத்தது மந்த-சனி, பின் ஜீவ-குரு முடிவில் மங்கள என்பது அங்காரகன் இந்த ஏழு கிரகங்களும் மேற் கூறிய க்ரமத்திலேயே தினசரி மாறிக்கொண்டே இருக்கும்.

---

ரா : தெரிந்து கொண்டேன். தினமும் சூரியஉதயத்திலிருந்து இந்த வரிசையில் பார்த்துக் கொள்ள வேண்டுமா ?

வே : ராமு! அப்படிப் பார்க்கக்கூடாது. தினமும் சூரிய உதயத்திற்கு எந்தக்கிழமை ஆரம்பமோ, அந்தக் கிழமையின் ஹோரைத்தான் முதல்ஹோரையாகும். அடுத்த ஹோரை ஷை வரிசைப்படி பார்த்துக் கொள்ளவேண்டும். உதாரணம் பார்: வெள்ளிக்கிழமை தினம் சூரிய உதயத்திலிருந்து ஒரு மணி சுக்கிர ஹோரை. அடுத்த ஹோரை ஸோமஜன். அதாவது புதன். இப்படியே மணிக்கொரு தரம் மாறி மாறிப் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்.

ரா : சரிதான் சூரிய உதயம் சில மாதங்களில் 6-40 *A. M.* என்றிருக்கின்றது. அப்போது எப்படிப் பார்ப்பது ?

வே : சூரிய உதயம் 6-40 ஆக இருந்தால் அந்த மாதம் 7-40 *A. M.* வரை அந்தக் கிழமையின் ஹோரைத்தான் அந்த வரிசைப்படிப் பார்க்கவேணும்.

ரா : நல்லது, இந்த ஏழு ஹோரைகளில் எவைகள் நல்லவை ? எவைகள் கெட்டவை ?

வே : சுக்கிரன், புதன், சந்திரன், குரு இந்நான்கும் நல்ல ஹோரைகள். சுபம் செய்யவோ, பிரயாணம்செய்யவோ பிறரைக் காணவோ நல்ல ஹோரைகள். சூரியன், சனி, அங்காரகன் இம்மூன்று ஹோரைகளும் கெட்டவையாதலால் சுபத்திற்கு உதவாதவைகள்.

ரா : வேதம் ! இந்தப்படி எல்லாரும் பார்த்துதான் சுப காரியங்களைச் செய்கிறார்களா ? இதற்கும் பஞ்சாங்க சிரவணத்திற்கும் என்ன ஸம்பந்தம் ?

வே : அவசரப்படாதே, நம்பி நடப்பவர்களுக்குத்தான் க்ஷேமம் ஏற்படும். நம்பாதவர்களைப் பற்றி எதுவுமே இல்லை. பஞ்சாங்க சிரவணத்தைப்பற்றி சொல்வதற்கு இவை அடிப்படையாதலால் முன்ஹோரையைப் பற்றித்தெரிவித்தேன்.

ரா : சந்தோஷம், இனி ஹோரைப் பார்க்காமல் நான் எதையும் செய்யமாட்டேன். இவைகளின் பலன்களைப் பார்க்கவும் போகிறேன். நேரமாகி விட்டது வேதம் ! நாளை இரவு சுக்கிர ஹோரையில் வருகிறேன்.

---

**படுக்கும் போது பகவானை த்யாநம் செய்**

# ஸ்ரீ துலா புராண
# காவேரீ மஹிமை.

## அவதாரிகை.

கவேர ராஜனுக்கு மாயாதேவி பெண்ணாகத்தோன்றி நதியுமாகி ஸமுத்ரராஜனை மணப்பது இங்குள்ள சரிதம். துலா மாஸமெனும் ஐப்பசி மாதம் முழுவதும் காவேரியில் கங்கை முதலிய எண்ணிறந்தபுண்ணிய தீர்த்தங்கள் வந்து தங்கள் பாபத்தை அகற்றிக் கொள்கின்றன. ஆதலால் துலாபுராணம், அல்லது துலாகாவேரி மஹிமை எனக் கூறப்படுகிறது. இது குடகு மலையிலிருந்து மைசூர் திருச்சி ஈரோடு தஞ்சை ஆகிய ஜில்லாக்களில் பாய்ந்து காவிரிபூம்பட்டிணம் என்ற விடத்தில் ஸமுத்ர சங்கமமாகிறது.

பௌராணிக ரீதியில் ஸ்ரீரங்கம் மாயவரம் என்ற இடங்களில் துலாமாதத்தில் ஸ்நானம் செய்வோர் முக்தி பெறுவர் எனக் கூறப்படுகிறது. தலைக்காவேரி முதல் கடைக்காவேரி வரை இரு புறங்களிலும் சிவ விஷ்ணு க்ஷேத்ரங்களும் அக்ரஹாரங்களும் நிறைந்திருக்கின்றன. பாசனத்திற்கும் பயன் பட்டு தனது வண்டலுடன் பயிர்களுக்குப் பாய்ந்து நெல் விளைவை விருத்தி செய்கிறது. இம்மை மறுமை இரண்டிற்கும் ஸாதநமான காவேரீ ஜீவ ராசிகளுக்கு ஜீவநாடி எனத்தகும்.

துலா மாஸத்தில் காவேரி ஸ்நாநம் செய்து காவேரிக்கரையில் துலா புராணம் கேட்பது மிக புண்யகரமானது. இதை நாடி காவேரி தீரத்தில் ஒவ்வொரு ஊரிலும் புராணம் கூறுபவருக்கு மான்யமாக பூமிதாநம் செய்யப்பட்டிருக்கிறது. அன்றியும் அந்த முப்பது நாட்களிலும் ஸ்நாநம் செய்வோர் அன்றன்றும் ஏதேனும் தாநம் செய்வர். தானங்களின் பெருமை இந்த புராணத்தில் மிக விரிவாக உள்ளது. ஆதலால் இதைக் கேட்பவர் சிறிதளவேனும் தாநம் செய்யாமல் போகமாட்டார்.

பச்சைக் கொடுத்தால் பாபம் தீருமென கறிகாய்களையும் அளிப்பர். ஆதலால் சில வம்பர் இதைப் புடலங்காய் புராணம் என்பர்.

காவேரியை வியாஜமாகக் கொண்டு ஸகல தர்மங்களையும் இதில் வர்ணிக்கிறார் புராண கர்த்தா. இந்த கதை ஆக்நேயபுராணத்திலும் பிரும்ம வைவர்த்த புராணத்திலுமுள்ளதாகக் கூறப்படுகிறது. ஆக்நேய புராணத்தைச் சார்ந்தது. க்ரந்தாக்ஷரத்திலும் மற்றது தெலுங்கு எழுத்திலும் அச்சிடப்பட்டுள்ளது. க்ரந்தாக்ஷரத்திலுள்ளது முப்பது அத்யாயம் உள்ளது. தென் தேசத்தில் இதே ப்ரஸித்தமானது. இன்றைக்கும் துலா மாஸத்தில் சில இடங்களில் முக்யமாக மாயவரம் அரசமரத்துறையில் இது நடக்கின்றது. நமது தர்மம் ப்ராசீனமான ஸ்திரீகளால் ரக்ஷிக்கப்பட்டது. இப்போதும் பெண்களே அதிகமாக துலா ஸ்நானம் செய்கின்றனர்.

காவேரி ஸ்நானப் பலனைக் கூற மிக ரஸமான பற்பல கதைகள் கூறப்பட்டிருக்கின்றன. அரிய பற்பல தர்மங்கள் இதில் இருக்கின்றன. ஆதலின் இதை ஒரு சுலோகம் கூட விடாமல் எழுதுகிறோம். சில இடங்களில் சொன்னதே திரும்பத் திரும்பக் கூறப்படும். அத்தகைய இடங்களில் அபூர்வமானதை மாத்ரம் கூறுகிறோம். சில ஆண்டுகளுக்கு முன் இது தமிழில் அச்சிடப்பட்டிருந்தது. தற்சமயம் அது விலைக்கு அகப்படுவதில்லை. துலா ஸ்நானம் செய்வோரும் மற்றோரும் இதைக் கட்டாயம் படித்து அறிந்து விதிப்படி ஸ்நானம் தானம் புராண ச்ரவணம் இவைகளை செய்யவேண்டுமென நமது அவா. ஆதலால் முழுமையும் எளிய நடையில் நல்ல பேப்பரில் ஸ்வல்ப விலைக்கு அச்சிட்டுத் தருகிறோம். ஏற்கனவே காவேரீ பூஜை என மிகச் சிறிய புத்தகம் வெளியிட்டோம். அதில் விரிவான சரிதமில்லை.

இதில் நித்ய-ஸ்நான ஸங்கல்பம், பூஜாவிதி, விசேஷ ஸங்கல்பம், விசேஷ பூஜை, காவேரி 108 அர்ச்சனை, அர்க்யதானம் முதலியவைகளைச் சேர்த்திருக்கிறோம். ஆஸ்திகர் இதையும் ஆதரிப்பார்களாக.

குருகுலம்,
W. மாம்பலம்.

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,
18 புராண ப்ரசுரதார்.

## ஸ்ரீ காவேரீ நித்ய ஸ்நான பூஜை அர்க்யம்.

காலலம்பி ஆசமநம் செய்து முதலில் ஸ்நாந ஸங்கல்பம் செய்யவேண்டும். காவேரீ, கங்கை முதலிய புண்ய தீர்த்தக்கரையில் முதலில் நமஸ்காரம் செய்து அந்த தீர்த்தத்தில் காலை வைக்காமல் அந்த ஜலத்தைத் தலையில் ப்ரோக்ஷித்துக்கொண்டு பிறகு அதில் காலலம்பி ஆசமநம் செய்யவேண்டும். விழுப்புடன் ஸங்கல்பம் செய்யக் கூடாது. ஆதலால் விழுப்பு நீங்க ஒரு ஸ்நாநம் செய்து வஸ்த்ரத்தைப் பிழிந்து கட்டிக்கொண்டு நெற்றிக்கிட்டுக்கொண்டு ஸங்கல்பம் செய்யவேண்டும்.

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் ப்ரஸன்ன வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோப சாந்தயே. ஓம் பூ:-ரோம்-மமோ பாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்தம், சுபே சோபநே முகூர்த்தே ஆத்ய ப்ரம்மண: த்விதியே பரார்த்தே ச்வேத வராஹ கல்பே, வைவஸ்வத மன்வந்தரே, கலியுகே ப்ரதமே பாதே ஜம்பூத்வீபே, பாரதவர்ஷே, பரதகண்டே, மேரோ: தக்ஷிணே பார்ச்வே, ஶகாப்தே, அஸ்மின் வர்த்தமானே வ்யாவஹாரிகே, ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணும் மத்யே (அந்தந்த வருஷம்)-நாமஸம்வத்ஸரே தக்ஷிணயநே சரத்ருதௌ துலாமாஸே-பக்ஷே-சுபதிதௌ-வாஸரயுக்தாயாம்-நக்ஷத்ரயுக்தாயாம், ஏவங்குண, விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம்-திதௌ ஜன்மாப்யாஸாத் ஜன்ம ப்ரப்ருதி ஏதத்க்ஷண பர்யந்தம் மத்யே ஸம்பாவிதாநாம் ஸர்வேஷாம் பாபாநாம் ஸத்ய: அபநோதனுர்த்தம் (விதவையானுல் ஞானவைராக்ய ஸித்யர்த்தம்) ஸகுடும்பஸ்ய மம, க்ஷேமஸ்தைர்ய வீர்ய விஜய ஆயுராரோக்ய அபிவிருத்யர்த்தம் ஸர்வாபீஷ்ட ஸித்யர்த்தம், ஸமஸ்த ஹரிஹர தேவதா ஸன்னிதௌ, ப்ராம்மண ஸன்னிதௌ, (அந்தந்த தேவீ தேவர்கள் பெயரைச் சேர்த்துக் கொள்ளவும்.) (ரிஷப தீர்த்தே) காவேரீ ஸ்நாந மஹம் கரிஷ்யே. (ஸ்நாநம்)

கையை அலம்பி, அதிக்ரூர மஹாகாய கல்பாந்த தஹநோபம | பைரவாய நமஸ்துப்யம், அநுக்ஞாம் தாதுமர்ஹஸி || கங்கேச யமுனே சைவ கோதாவரி, ஸரஸ்வதி | நர்மதே ஸிந்து காவேரி, ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு || த்ரி ராத்ரம் ஜான்னவீ தோயே-பஞ்சராத்ரந்து யாமுனே | ஸத்ய: புநாதி காவேரீ பாபம் ஆமரணாந்திகம் ||

புருஷர்கள் வேதமறிந்து இருந்தால் இமம்மே கங்கே ஆபோவா, முதலிய மந்த்ரங்களைக்கூறி ஸ்நாநம் செய்ய லாம். புருஷர் ஸ்நாநாங்கமான தேவரிஷி பித்ரு தர்ப்ப ணம் செய்யவேண்டும்.

மடிவஸ்த்ர மணிந்து நெற்றிக்கணிந்து காவேரி பூஜை காவேரீ ஜலத்தில் செய்க. வீடானல் தீர்த்தப் பாத்ரத் தில் காவேரீம் த்யாயாமி, காவேரீம் ஆவாஹயாமி, காவேர்யை நம: ஆஸநம் ஸமர்ப்பயாமி காவேர்யை நம: பாத்யம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நம: அர்க் யம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நம: ஆசமநீயம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நம: ஸ்நாநம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நம: வஸ்த்ரம் ஸமர்ப்பயாமி. காவேர்யை நம: கந்தான்தாரயாமி, காவேர்யை நம: குங்குமம் ஸமர்ப்ப யாமி, காவேர்யை நம: மருத்வருதாயை நம; ஸஹ்யாசல ஸமுத்பூதாயை நம; கவேரதனயாயை நம; அகஸ்த்ய ஆநீதாயை நம: ஆமலக தீர்த்த தாராயை நம; ஸமுத்ர காமின்யை நம: புஷ்பை: பூஜயாமி, காவேர்யை நம; தூபம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நம: தீபம் ஸமர்ப்ப யாமி, கவேர்யை நம: (கதளீபலம், திராக்ஷாபலம்.) நாரிகேளம் நிவேதயாமி. காவேர்யை நம: நைவேத் யா நந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி. காவேர்யை நம; தாம்பூலம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நம; கர்பூர நீரா ஜனம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நம: மந்த்ர புஷ்பம் ஸுவர்ண புஷ்பம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நம: ப்ரத க்ஷிண நமஸ்காரான் ஸமர்ப்பயாமி.

**(அர்க்ய ப்ரதானம்)**

1. மருத் வ்ருதே மஹா பாகே-ஸர்வலோகைக பாவநி, க்ருஹாணார்க்யப் மயாதத்தம் பாவநம் குருமாம் ஸதா ॥ (காவேர்யை நம; இதமர்க்யம் இதமர்க்யம் இதமர்க்யம் 3 அர்க்யம்.)

2. விஷ்ணுமாயே மஹாகாயே கவேரகுல ஸம்பவே ஸஹ்யாசல ஸமுத்பூதே க்ருஹாணார்க்யம் வரப்ர தே ॥ (காவேர்யை நம; இதமர்க்யம் 3 அர்க்யம்)

3. கும்பஸம்பவ கும்பாத், த்வம்–ஸஹ்யாமலக பூஜயா சங்கோதகேந ஸஞ்ஜாதா க்ருஹாணார்க்யம் ஸமுத் ரகே ॥ (காவேர்யை நம: இதமர்க்யம் 3 அர்க்யம்.)

## துலாஸ்நாந மந்த்ர அர்த்தம்.

[துலா மஹிமை ப்ரும்ம வைவர்த்த புராணத்திலும் ஆக்நேய புராணத்திலும் கூறப்பட்டிருக்கின்றன. எங்கே ஸ்நாநம் செய்தாலும், துலா புராணம் கேட்டாலும் ஸகல பாபங்களும் அகன்று ஸகல க்ஷேமமும் உண்டாகும். மருத்வ்ருதே முதல் சதுராநந கன்யகாவரை காவேரியின் 18 நாமாக்கள். அதைக் கூறினலே பாபம் அகலும். அதிக்ரூர என்பதால் பைரவரிடம் ஸ்நாநம் செய்ய உத்திரவு பெற்றுக்கொள்கிறோம். அவர் உக்ரமானவர், அவர் உத்திரவின்றி ஸ்நாநம் செய்தால் பலன் உண்டாகாது. கெடுதலும் உண்டாகும். கங்கேச என்பதால் ஏழு நதிகளையும் அழைக்கிறோம். த்ரிராத்ர மென்பது கங்கைக் கரையில் 3 நாள், யமுனையில் ஏழுநாள் இருந்தால்தான் பாபம் அகலும். காவேரியோ சாகும்வரைச் செய்யும் பாபத்தை உடனே போக்குகிருள். மருத்வ்ருதே முதல் 3 அர்க்யம் சுலோகங்களால் காவேரியின் மஹிமையைக் கூறி நம் பாபத்தை அகற்றும்படி வேண்டுகிறோம்.]

### ப்ரார்த்தனே.

கவேரகன்யே காவேரி—தேவஸங்காத பூஜிதே !
ஆயுராரோக்யம் ஐச்வர்யம் வித்யாம் தேஹிஶ்ரியஞ்சமே.
அநயா பூஜயா காவேரீப்ரியதாம்.

### வரும்போது ப்ரார்த்தனே.

யந்மயா தூஷிதம் தோயம் சாரீரமல ஸஞ்சயை:
பாபம்மம ஹரக்ஷிப்ரம் ஸஹ்யகன்யே நமோஸ்துதே ||

[ஸுமங்கலிக்குத் தாம்பூலம் ப்ராம்மண குருதக்ஷிணை தரவும். ஒரு மாதம் துலாஸ்நாநம் செய்தபின் கடைசியில் விஸ்தாரமாகச் செய்யவேண்டிய காவேரிபூஜையை குரு மூலமாகச் செய்யவும்.]

### விசேஷ ஸங்கல்பம்.

ஶுக்லாம் ...... ஶாந்தயே ... ஓம்பூ: ...... ஸுவரோம் மமோ...... யர்த்தம் அபவித்ர: பவித்ரோவா ஸர்வாவஸ்தாம் கதோபிவா-யஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸ பாஹ்யாப்யந்தர: ஶுசி: | மாநஸம் வாசிகம் பாபம் கர்மணு ஸமுபார்ஜிதம் ஸ்ரீ ராமஸ்மரணேநைவ வ்யபோஹதி ந ஸம்ஶய: | ஸ்ரீராம ராம ராம திதிர் விஷ்ணு: ததா வார:

நக்ஷத்ரம் விஷ்ணுரேவச யோகஶ்ச கரணஞ்சைவ ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத் ஸ்ரீ கோவிந்த கோவிந்த கோவிந்த அத்ய ஸ்ரீ பகவத: ஆதிவிஷ்ணோ: ஆக்ஞயா ப்ரவர்தமாநஸ்ய ஆத்ய ப்ரம்மண: த்விதீயே பரார்த்தே ஶ்வேத வராஹ கல்பே வைவஸ்வத மன்வந்தரே அஷ்டாவிம்ஶதி தமே கலௌயுகே ப்ரதமே பாதே ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே மேரோ: தக்ஷிணே பார்ஶ்வே ஶகாப்தே அஸ்மின் வர்தமாநே வ்யாவஹாரிகே ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணும் மத்யே—நாம ஸம்வத்ஸரே தக்ஷிணயநே ஶரத்ருதௌ துலாமாஸே—பக்ஷே—திதௌ—வாஸரயுக்தாயாம்—நக்ஷத்ரயுக்தாயாம் ஶுபயோக ஶுபகரண ஏவங்குண விசேஷண விஶிஷ்டாயாம் அஸ்யாம்— ஶுப திதௌ.

அநாத்யவித்யா வாஸநயா ப்ரவர்தமாநே அஸ்மின் மஹதி ஸம்ஸார சக்ரே விசித்ராபி: கர்மகதிபி: விசித்ராஸு யோநிஷு புந: புந: அநேகதா ஜநித்வா கேநாபி புண்ய கர்ம விஶேஷேண இதாநீந்தந மாநுஷ்யே த்விஜ ஜன்ம விஶேஷம் ப்ராப்தவத: மம ஜன்மாப்யாஸாத் ஜன்ம ப்ரப்ருதி ஏதக்ஷண பர்யந்தம் பால்யே வயஸி கௌமாரே யௌவநே வார்த்தகேச ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி அவஸ்தாஸு மநோவாக்காய கர்மேந்த்ரிய க்ஞானேந்த்ரிய வ்யாபாரை: ஸம்பாவிதாநாம் இஹ ஜன்மநி ஜன்மாந்தரேச க்ஞாநாக்ஞாநக்ருதாநாம் ப்ரகாஶ க்ருதாநாம் பிரும்மஹத்யாதி பஞ்சமஹாபாதகாநாம் அதிபாதகாநாம் உபபாதகாநாம் ஸங்கலீகரணாநாம் மலிநீகரணாநாம் அபாத்ரீகரணாநாம் ஜாதிப்ரம்ஸகரணாநாம் ப்ரகீர்ணகாநாம் க்ஞாநத: ஸக்ருத்க்ருதாநாம் அக்ஞாநத: அஸக்ருத்க்ருதாநாம் ஸர்வேஷாம் பாபாநாம் ஸத்ய: அபநோத நார்த்தம் ஸமஸ்த பாப க்ஷயார்த்தம்.

பாஸ்கர க்ஷேத்ரே விநாயகாதி த்ரய ஸ்த்ரிம்ஶத் கோடி தேவதாஸந்நிதௌ [அபய ப்ரதாம்பா ஸமேத மாயூரேஶ்வர ஸ்வாமி ஸந்நிதௌ, மங்களாம்பா ஸமேத வைத்தீஶ்வர ஸ்வாமி ஸந்நிதௌ ஶிவகாமி ஸுந்தரீ ஸமேத ஸ்ரீ சித்ஸபேஶ்வர ஸ்வாமி ஸந்நிதௌ அகிலாண்டநாயகி ஸமேத ஸ்ரீ ஜம்புகேஶ்வர ஸ்வாமி ஸந்நிதௌ பர்வத வர்த்தனீ ஸமேத ஸ்ரீ ராமநாத ஸ்வாமி ஸந்நிதௌ விஶாலாக்ஷீ ஸமேத ஸ்ரீ விஶ்வநாத ஸ்வாமி ஸந்நிதௌ அலமேலு மங்கா ஸமேத ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி

ஸந்நிதௌ ] தைவ ப்ராம்மண ஸந்நிதௌ ஸ்ரீ காவேரி ஸ்நாநமஹம் கரிஷ்யே.

அதிக்ரூர மஹாகாய கல்பாந்த தஹநோபம| பைரவாய நமஸ்துப்யம் அநுக்ஞாம் தாதுமர்ஹஸி || துர்போஜந துராலாப துஷ்ப்ரதிக்ரஹ ஸம்பவம் | பாபம் ஹர மம க்ஷிப்ரம் ஸஹ்ய கன்யே நமோஸ்துதே || த்ரி ராத்ரம் ஜான்ஹவீதிரே பஞ்சராத்ரந்து யாமுநே | ஸத்ய: புநாதி காவேரீ பாபம் ஆமரணாந்திகம் || ஷஷ்டி வர்ஷ ஸஹ ஸ்ராணி கங்காயாம வகாஹநம், ஸ்நாநமே தந்து காவே ர்யாம் துலாயாந்து திவாகரே-துஷ்டபாப ப்ரஶமநம் குஷ்ட வ்யாதி நிவாரணம்-காவேரீ வந்தநம் புண்யம் கை வல்யம் தத்ஜலம்பிபேத் ||

## காவேரீ விசேஷ பூஜை.

ஶுக்லாம்....... ஶாந்தயே, ஓம் பூ:...... ஸுவரோம்— ஶுபே.............திதௌ, மமோ...........யர்த்தம், விசேஷத: ஸர்வபாப நிவாரணார்த்தம், ஸர்வாபீஷ்ட ஸித்யர்த்தம் காவேரீ பூஜாம் கரிஷ்யே. கையலம்பி, ஆகமார்த்தந்து தேவாநாம் கமநார்த்தந்து ரக்ஷஸாம் | குரு கண்டாரவம் தத்ர தேவதாஹ்வாந லாஞ்சநம் || (மணி அடித்து) கலசத் தில் கீழ்கண்ட மந்த்ரங்களைக் கூறி ஆவாஹநம் செய்ய வேண்டும். வேதமறிந்தவர். 1 இமம்மே கங்கே......... ஸுஷோமயா. 2 ஆபோவா.........ஆப ஓம். காவேரீம் ஆவாஹயாமி. கீழ்வரும் பதினாறு நாமாக்களை முதலில் கூறவேண்டும். [2, 3, 4 என்பன வர்க்கக் கணக்கைக் கூறும். 2 கர்ஜரீ, 3 கஜம், 4 கநம்.]

மருத்³ வ்ருதா⁴ மஹாலக்ஷ்மீ - ஸஹ்ய கன்யா ஸரஸ்வதீ
அக³ஸ்த்ய பத்நீ காவேரீ - லோபா முத்³ரா வரப்ரதா³ |
கமண்ட³லு ஸமுத்பந்நா - ஸர்வ தீர்த்த² அதி⁴ தே³வதா
விரஜா த³க்ஷிண கங்கா - ப்ரும்ம விஷ்ணு ஶிவாத்மிகா
சதுர்வித⁴ ப²லோத்தா⁴த்ரீ - சதுராநந கன்யகா²
ஸர்வாபீ⁴ஷ்ட ப்ரதா³த்ரீச-நாம்நாம் ஷோட³ஶகம் ஸ்மிருதம்
ஏபி⁴ர் நாமபதை³ர் நித்யம் - பூஜயேத் பக்திமான் நர:
அச்ச ஸ்வச்ச லஸத் து³கூல வஸநாம் பத்மா ஸநாத்⁴யாஸிநீம்
ஹஸ்த ந்யஸ்த வராப்ஜ கலஶாம் ராகேந்து³ கோடிப்ரபா⁴ம்
பா⁴ஸ்வத் பூ⁴ஷண க³ந்த⁴ மால்ய ருசிராம் சாருப்ரஸன்னாநநாம்

ஸ்ரீகங்காதி3 ஸமஸ்த தீர்த்தநிலயாம் த்4யாயாமி காவேரிகாம். ஸ்ரீ காவேரீம் த்யாயாமி.

ஸ்ரீ கண்ட விஶ்வேஶ்வர ஸந்நிப4ாநி லிங்கா3நி யத்3 ரோத4ஸி லக்ஷ கோட்ய: ‖ ஜலப்ரவாஹேபி ச கோடி கோட்ய: கவேரஜாயா: ஶிவ மூர்த்தய: ஸ்யு: ‖

பயாம்ஸி தீர்த்தா2நி ஶிலாஶ்ச தேவதா: தி3வௌக ஸோவாலுகதாம் ப்ரபன்ன: | அதோ நதீ ஸஹ்ய கி3ரி ப்ரஸூதா ஸரித்ஸு முக்யா மநுஜை: அலப்4யா ‖ ஸ்ரீ காவேரீம் ஆவாஹயாமி.

ஆதா3 வாதி3 விதா4த்ரு மாநஸ ஸுதா பஶ்சாத் கவேராத்மஜா பூ4ய: கும்ப4 ப4வஸ்ய தஸ்ய த3யிதா தஸ்மாத் நதீ ரூபிணீ, ஸ்ரீரங்கா துல கும்பகோண விலஸத் மாயூர மத்4யார்ஜுந ஶ்வேதாரண்ய முக2 ஸ்த2லேஷு மஹிதா ஸஹ்யாத்3ரிஜா த்3ருஶ்யதே ‖ ஸ்ரீகாவேர்யை நம: ஆஸநம் ஸமர்ப்பயாமி.

மருத்3 வ்ருதே4 மஹாதேவி - மஹாபா4கே3 மனோஹரே | ஸர்வா பீ4ஷ்ட ப்ரதே3 லோக-மாத: பாத்3யம் த3தா3மிதே ‖ ஸ்ரீகாவேர்யை நம: பாத்4யம் ஸமர்ப்பயாமி.

ஸஹ்ய பாதோ3த்3 ப4வே தேவி - ஸ்ரீரங்கோத் ஸங்க பா4மிநி | காவேரீ நாம விக்2யாதே - க்3ருஹாண ர்க்4யம் ததா3மிதே ‖ ஸ்ரீ காவேர்யை நம: அர்க்யம் ஸமர்ப்பயாமி.

ஸ்ரீ ஸஹ்ய ஶைலதநயே - ஸர்வா ஸஹ்ய நிவாரிணி ப்ரஸாத3ம் குருமே தேவி - ப்ரஸன்ன ப4வ ஸர்வதா3 ‖ ஸ்ரீ காவேர்யை நம: ஆசமநீயம் ஸமர்ப்பயாமி.

துலா மாஸேது காவேரி - ஸர்வ தீர்தா ஶ்ரிதா நதீ பஞ்ச பாதக ஸம்ஹர்த்ரீ - வாஜிமேத4 ப2ல ப்ரதா ‖ ஸ்ரீ காவேர்யை நம: பஞ்சாமிருத ஸ்நாநம் ஸமர்ப்பயாமி.

காவேரீ தீர ஜன்மாந: - ம்ருக பக்ஷி மஹீருஹா: தத்3 வாரி ஶீத வாதைஶ்ச - ஸ்ப்ருஷ்டா முக்திம் ப்ரயாந்திவை: ‖ ஸ்ரீ காவேர்யை நம: ஶுத்த உத3க ஸ்நானம் ஸமர்ப்பயாமி.

கவேர கன்யே காவேரி - நிம்நகா3 நாத2 நாயிகே | வஸ்த்ராணி வஸ பூ4வஸ்த்ரே பு4க்தி முக்தி ப்ரதா3யிநீ ‖ ஸ்ரீ காவேர்யை நம: வஸ்த்ரம் ஸமர்ப்பயாமி.

ஸர்வ யக்ஞாஶ்ரய தடே - ஸர்வ யக்ஞ ஸஹாயநி யக்ஞாங்க3 ஸம்ப4வே தேவி - ஸர்வ யக்ஞ ப2ல ப்ரதே3 ‖ ஸ்ரீ காவேர்யை நம: யக்ஞோபவீதம் ஸமர்ப்பயாமி.

ஜய தேவி ஜகன்மாத: - லோபா முத்ரே புராதநே
ஜய ப4த்3ரே ப4வோத்தா4ரி - மங்களே மங்கள ப்ரதே3 ||
ஸ்ரீ காவேர்யை நம: மங்கள த்ரவ்யம் ஸமர்ப்பயாமி.

சந்தநாக3ரு கஸ்தூரீ ஹிமவாலுக கேஸரை: ராங்கவை: ஸாங்கவைர் யுக்தம்-க3ந்த4ம் ஸ்வீகுரு ஸஹ்யஜே ||
ஸ்ரீ காவேர்யை நம: கந்தம் ஸமர்ப்பயாமி.

யஸ்யாம் ஸக்ருத் ஸ்நாந மாத்ராத் - நரோக்ஷய்ய ப2லம்லபே4த் நக்ஷத்ர மால்யவத் ஶுப்4ராம் — அக்ஷதை ரர்சயாம் யஹம் || ஸ்ரீ காவேர்யை நம: அக்ஷதான் ஸமர்ப்பயாமி.

கிரீட ஹார கேயூர – குண்டலாங்க3த3 கங்கணை:
ஹம்ஸ கைர் மேக2 வாத்3யைஶ்ச - பூ4ஷயே த்வாம்மருத்:3 விருதா4ம் || ஸ்ரீ காவேர்யை நம: ஆபரணாநி ஸமர்ப்ப3யாமி.

ப3ஹு ஜன்ம க்ருதாநேக-வாஸநா வாஸிதாத்மபி4: தி3வ்யை: ஸுமவரை: பூஜ்யாம் - பூஜயேத் புஷ்ப ஜாதிபி4: || ஸ்ரீ காவேர்யை நம: பூஷ்பை: பூஜயாமி.

## அங்க பூஜா.

| | | |
|---|---|---|
| மருத்3 வ்ருதா4யை நம: | பாதௌ3 | பூஜயாமி |
| மஹாலக்ஷ்ம்யை நம: | கு3ல்பௌ2 | ,, |
| ஸஹ்ய கன்யாயை நம: | ஜங்கே4 | ,, |
| ஸரஸ்வத்யை நம: | ஜாநுநீ | ,, |
| அகஸ்த்ய பத்ந்யை நம: | மத்4யம் | ,, |
| காவேர்யை நம: | நாபி4ம் | ,, |
| லோபா முத்ராயை நம: | ஹ்ருதயம் | ,, |
| வர ப்ரதா3யை நம: | ஸ்தநௌ | ,, |
| கமண்ட3லு ஸமுத்பன்னாயைநம: | பா3ஹூ | ,, |
| ஸர்வ தீர்தா2தி4 தேவதாயை நம: | கண்ட2ம் | ,, |
| விரஜாயை நம: | நாஸிகாம் | ,, |
| தக்ஷிண க3ங்கா3யை நம: | ஶ்ரோத்ரே | ,, |
| ப்ரும்ம விஷ்ணு ஶிவாத்மிகாயைநம: | நேத்ரே | ,, |
| சதுர்வித4 ப2ல உத்த4ர்யை நம: | வக்த்ரம் | ,, |
| சதுராநந கன்யகாயை நம: | ஶிர: | ,, |
| ஸர்வாபீ4ஷ்ட ப்ரதா3த ன்யைநம: | ஸர்வாணி அங்காநி | ,, |

# ஸ்ரீ காவேரி அஷ்டோத்ர சதநாமார்ச்சனை.

அநந்தகுண க$^{3}$ம்பீ$^{4}$ராயை நம:
அர்க புஷ்கர ஸேவிதாயை நம:
அம்ருத ஸ்வாது$^{3}$ ஸலிலாயை நம:
அகஸ்த்யமுநி நாயிகாயை நம:
5 ஆஸாந்த கீர்த்தி திலகாயை நம:
ஆஸாகாக$^{3}$ம வர்தி$^{4}$ன்யை நம:
இதிஹாஸ புராணோக்தாயை நம:
ஈதிப$^{3}$ாத$^{4}$ா நிவாரிண்யை நம:
உன்மத்த ஜநது$^{3}$ர ஸ்தா$^{2}$யை நம:
10 ஊர்ஜிதா நந்த தாயின்யை நம:
ரிஷிஸங்க$^{3}$ ஸம்ஸம் வீதாயை நம:
ரிணத்ரய விமோசநாயை நம:
லுப்த தர்ம உத்தா$^{4}$ராயை நம:
லூந பா$^{4}$வ விவர்ஜிதாயை நம:
15 ஏ$^{3}$தி$^{4}$தாகி$^{2}$ல லோகஸ்ரியை நம:
ஐஹிகாமுஷ்மிக ப்ரதா$^{3}$யை நம:
ஓங்கார நாத$^{3}$ நிநதா$^{3}$யை நம:
ஓஷதீ$^{4}$ க்ருத ஜீவநாயை நம:
ஔதா$^{3}$ர்ய குண நிர்தி$^{3}$ஷ்டாயை நம:
20 ஔதா$^{3}$ஸீன்ய நிவாரிண்யை நம:
அந்த: கரண ஸம் ஸேவ்யாயை நம:
அச்ச ஸ்வச்ச ஜலாஸ்ரயாயை நம:
கபிலாக்$^{2}$ய நதீ ஸங்க$^{3}$தா$^{4}$யை நம:
கருணா பூர்ண மாநஸாயை நம:
காவேரீ நாம விக்$^{2}$யாதாயை நம: 25
காமிதார்த்த$^{2}$ ப$^{2}$லப்ரதா$^{3}$யின்யை நம:
கும்பகோண க்ஷேத்ர நாத$^{2}$ாயை நம:
கௌதுக ப்ரத$^{2}$ம ப்ரபா$^{4}$யை நம:
க$^{2}$க$^{3}$ராஜ ரரோத்ஸாஹ ரங்கஸ்த$^{2}$லஸாஸோபி$^{4}$தாயை நம:
க$^{2}$க$^{3}$ாவளி ஸமாக்ராந்த கல்லோலாவளி மண்டி$^{3}$தாயை நம: 30
க$^{3}$ஜாரண்ய ஸவிஸ்தீர்ண ப்ரவாஹஜந மோஹின்யை நம:
கா$^{3}$யத்ர்யாக்$^{2}$ய ஸிலா மத்யாயை நம:
கருடாஸந பக்திதாயை நம:
க$^{4}$ந க$^{3}$ம்பீ$^{4}$ர நிநத$^{3}$ நிர்ஜர ப்ராப்த நிர்ஜராயை நம:
சந்த்ர புஷ்கர மத்யஸ் தா$^{2}$யை நம: 35
சதுராநந புத்ரிகாயை நம:
சோளதேஸ ஜநோத்தா$^{4}$ர க்ரீஷ்ம கால ப்ரவாஹின்யை நம:
சுஞ்ச க்ஷேத்ர ஸ்மாநீதாயை நம:
சத்$^{3}$ம தோஷ நிவாரிண்யை நம:
ஜம்பூ த்வீப ஸரித்ஸ்ரேஷ்டநதீநதக$^{3}$ரீயஸ்யை நம: 40

ஜங்கார நாத ஸம்மிருஷ்ட ஷட்பதா$^{3}$ளி ஸமா
குலாயை நம:

க்ஞானைக ஸாத$^{4}$ந பராயை நம:
க்ஞப்தி மாத்ர ஆர்த்திஹாரிண்யை நம:
டிட்டிபா$^{4}$ ராவ ஸவ்யாஜ தி$^{3}$விஜ ஸ்துதி
பாத்ரிண்யை நம:

டங்கார நாத$^{3}$ ஸம்பே$^{4}$த$^{3}$ ஜர்ஜரீக்ருத
பர்வதாயை நம: 45
ட$^{3}$ாகிநீ ஶாகிநீ ஸங்க$^{4}$ நிவாரண ஸரித்தடாயை நம:
ட$^{4}$க்கா நிநாத$^{3}$ பாரீண பார்வதீஶ ஸமாஶ்ரிதாயைநம:
ஞாந்த வாச்ய த்$^{3}$விஜா ஷ்டாங்க$^{3}$ யோக$^{3}$ ஸாத$^{4}$ந
தத்பராயை நம:
தரங்கா$^{3}$வளி ஸம்வித்த$^{4}$ ம்ருது$^{3}$ வாலுக
ஶோபிதாயை நம:
தபஸ்வி ஜந ஸத்கார நிவேஶித ஶிவாஸநாயை நம: 50
தாபத்ரய தரூன்மூல கங்காதி$^{3}$பி$^{4}$ரபிஷ்டுதாயை நம:
த$^{2}$ாந்த ப்ரத$^{2}$ம ஸம்ஸேவ்ய ஸாம்ப ஸான்னித்ய
காரிண்யை நம:
த$^{3}$யா தா$^{3}$க்ஷிண்ய ஸத்கார ஶீல லோக ஸபா$^{4}$வி
தாயை நம:
தா$^{3}$க்ஷிணாத்ய ஜனோத்தா$^{4}$ர நிர்விசார த$^{3}$யான்
விதாயை நம:
த$^{4}$ந மாந மதா$^{3}$ந்தா$^{4}$ தி$^{3}$ மர்த்ய நிர்வர்தந
ப்ரியாயை நம: 55

நமஜ்ஜனோத்தா$^{4}$ர ஶீலாயை நம:
நிமஜ்ஜத் ஜநபாவனாயை நம:
நாகா$^{3}$ரி கேதுநிலயாயை நம:
நாநாதீர்த்தா$^{2}$தி$^{4}$ தேவதாயை நம:
நாரீஜந மனோல்லாஸாயை நம: 60
நாநாரூப ப$^{2}$ல ப்ரதா$^{3}$யை நம:
நாராயண க்ருபா ரூபாயை நம:
நாத$^{3}$ ப்ரும்ம ஸ்வரூபிண்யை நம:
பராபூ$^{4}$த ஸமஸ்த அகா$^{4}$யை நம:
பஶு பக்ஷ்யாதி$^{3}$ ஜீவநாயை நம: 65
பாப தூலாக்னி ஸத்ருஶாயை நம:
பாபிஷ்ட$^{2}$ ஜநபாவனாயை நம:
ப$^{2}$ணீந்த்ர கீர்திந கலாயை நம:
ப$^{2}$லதாந பராயணாயை நம:
ப$^{3}$ஹு ஜன்ம தபோயோக$^{3}$ ப$^{2}$ல ஸம்ப்ராப்த
த$^{3}$ர்ஶநாயை நம: 70
பா$^{3}$ஹுரூப த்$^{3}$வி பார்ஶ்வஸ்த$^{2}$ ஸ்வமாத்ருக
ஜலார்த்தி$^{3}$ நாம் । ஸௌம க்ஷேத்ர ஶால்யன்னதா$^{3}$
நநிர்ஜித வித்தபாயை நம: ॥
ப$^{4}$கவத் க்ருத ஸந்தோஷாயை நம:
பாஸ்கர க்ஷேத்ரகா$^{3}$மின்யை நம:
பா$^{3}$கீரதீ$^{2}$ ஸமாக்ராந்த துலாமாஸ ஜலாப்ரயாயை நம:
மஜ்ஜத் து$^{3}$ர்ஜந ப்ராக் ஜன்ம து$^{3}$ர்ஜயா மஹ:
ப்ரமார்ஜன்யை நம: 75

மாக$^{4}$ வைஶாகா$^{2}$தி$^{3}$ மாஸ ஸ்நாந ஸ்மரண
ஸௌக்யதா$^{3}$யை நம:
யக்ஞ தாநதப: கர்மகோடி புண்ய ப$^{2}$லாஶ்
ரயாயை நம:
யக்ஷ கந்தர்வ வித்தா$^{4}$த்$^{3}$யை: அபி$^{4}$ஷ்டுத பத$^{3}$
த்$^{3}$வயாயை நம:
ரகுநாத பதத்வந்த்வ விராஜித ஶிலா தலாயை நம:
ராமநாத புரக்ஷேத்ர காமதேநு ஸமாஶ்ரயாயை நம:
லவோத$^{3}$க ஸ்பர்ஶ மாத்ர நிர்வாண பத$^{3}$
தாயின்யை நம:
லக்ஷ்மீ நிவாஸ ஸத$^{3}$நாயை நம:
லலநா ரத்ந ரூபிண்யை நம:
லக$^{4}$க்ருத ஸ்வர்க போ$^{4}$காயை நம:
85 லாவண்ய குண ஸாக$^{3}$ராயை நம:
வஹ்நி புஷ்கர ஸாந்நித்$^{4}$யாயை நம:
வந்தி$^{3}$தாகி$^{2}$ல லோகபாயை நம:
வ்யாக்ரபாத க்ஷேத்ர பராயை நம:
வ்யோம யாந ஸமா வ்ருதாயை நம:
90 ஷட்கால வர்த்$^{3}$ப சரண்யை நம:
ஷட்கர்ம நிரத ப்ரியாயை நம:
ஷட$^{3}$ாஸ்ய மாத்ரு ஸம்ஸேவ்யாயை நம:
ஷடூ$^{3}$ர்மி ஜித ஸோர்மிகாயை நம:
ஸக்ருத் ஸ்மரண ஸம்சுத்த —
தாபத்ரய ஜாஶ்ரிதாயை நம:
ஸஜ்ஜநோத்தா$^{4}$ர ஸந்தா$^{4}$ந—
ஸமர்த்த ஸ்வப்ர வாஹின்யை நம:
ஸரஸ்வத்யாதி$^{3}$ தேவீபி: அபி—
வந்தித நிர்ஜராயை நம:
ஸஹ்ய ஶைல ஸமுத்$^{3}$பூ$^{4}$தாயை நம:
ஸஹ்யா ஸஹ்ய ஜந ப்ரியாயை நம:
ஸங்கம க்ஷேத்ர ஸாமீப்யாயை நம:
ஸ்வ வஶார்த்த$^{4}$ சதுஷ்டயாயை நம: 100
ஸௌப$^{4}$ரி க்ஷேத்ர நிலயாயை நம:
ஸௌபா$^{4}$க்ய ப$^{2}$லதாயின்யை நம:
ஸம்ஶயா விஷ்ட ஆரஸ்த$^{2}$ாயை நம:
ஸாங்கோ பாங்க ப$^{2}$லதாயின்யை நம:
ஹரி ப்ரும்மேஶ லோகேஶ வித்த$^{4}$ ப்$^{2}$ருந்தா$^{3}$ர
வந்தி$^{3}$தாயை நம:
க்ஷேத்ர தீர்த்த$^{2}$ாதி$^{3}$ ஸீமாந்தாயை நம:
க்ஷபாநாத$^{2}$ ஸாஶ்ரீ தளாயை நம:
க்ஷமாதலாகி$^{2}$லா நந்த க்ஷேமஶ்ரீ விஜயா
லஹாயை நம:
ஸ்ரீ காவேர்யை நம:
அஷ்டோத்தர ஶதநாமார்ச்சநம் ஸமர்ப்பயாமி.

த3பராங்கோ3 கு3க்க3 லூபேத: ஸுகந்தோ க்4ராண தர்பண: மருத் வ்ருதே4ம்ப காவேரி தூ4போ யந்தே ஸமர் பித:ா ஸ்ரீ காவேர்யை நம: தூபம் ஸமர்பயாமி.

ஆபோ ஜ்யோதிஸ் த்வமஸ்யம்ப3–கும்ப4 ஸம்ப4வ தேஜஸா | தேஜ: ப்ரதா3த்ர காவேரி தீபோயம் ப்ரதிக் ருஹ்யதாம் || ஸ்ரீ காவேர்யை நம: தீபம் ஸமர்பயாமி.

அன்னம் சதுர்விதம் ருச்யம் – ஶாகவ்யஞ்ஜந ஸம் யுதம் ஸப2லம் ஸக்4ருதம் பு4ங்க்ஷ்வ – காவேரி தடிதாம் வரே || ஸ்ரீ காவேர்யை நம: ஸக்ருத குளபாயஸம் ஸபக்ஷ யம் ஶால்யான்னம் நிவேதயாமி–மத்யே மத்யே பாநீயம் ஸமர்ப்பயாமி. (வேதமறிந்தவர் விதிப்படி பரிஷேசந ஆபோஶந ப்ராணுக்நி ஹோத்ர உத்தரா போசந மந்த்ரங் கூறலாம்).

பூகீ3 ப2ல ஸமாயுக்தம் – நாக3வல்லீ த3ளைர் யுதம் | கர்பூர சூர்ண ஸம்யுக்தம்–தாம்பூலம் ப்ரதிக்3 ருஹ்யதாம் || ஸ்ரீ காவேர்யை நம: கர்பூர தாம்பூலம் ஸமர்பயாமி. ஸர்வ தீர்த்தைஸ் துலாமாஸே–த்வம் நீராஜித பாது3கா | நீராஜ யாமி பக்த்யாத்வாம் – காவேர்யம்ப மருத் வ்ருதே || ஸ்ரீ காவேர்யை நம: நீராஜநம் ஸமர்பயாமி. ப்ரதக்ஷிணம் கரோமித்வாம்–புருஷார்த்த2 ப்ரதா3யிநீ | தக்ஷிண வர்தக ஸ்ரீநிவாஸ ப்ரீதே மருத் வ்ருதே || ஸ்ரீ காவேர்யை நம: ப்ரதக்ஷிணம் ஸமர்பயாமி. நமஸ்தே தடிதாம் முக்யே – நிகமாகம ஸம்ஸ்துதே | பாஹி பாஹ்யம்ப காவேரி–ப்ரபந் நம் மாம் க்ருபாத்3ருஶா || ஸ்ரீ காவேர்யை நம: நமஸ் காரான் ஸமர்பயாமி. (ஸ்ரீ காவேரி ரூபாயை ஸுவா ஸின்யை வாயநம் ததாமி என்று ஸுமங்கலிகளுக்கு ஶக்திக்கேற்றபடி புடவை ரவிக்கை மஞ்சள் குங்குமம் பழம் தாம்பூலம் பக்ஷணம் தக்ஷிணை தாம்பூலம் தர வேண்டும்).

பாபக்ஷயம் பாரிஶுத்4யம் – ஆயுராரோக்ய மேவச | ஸௌபாக்ய மபி ஸந்தாநம் – க்ஞாநம் தேஹி மருத் வ்ருதே || என்று பிரார்த்தனை செய்து

ஸ்ரீ காவேர்யை நம: சத்ரம் ஸமர்ப்பயாமி. சாமரம் ஸமர்பயாமி. ஸமஸ்த ராஜோபசார தேவோப சாரான் ஸமர்பயாமி. உத்தர நீராஜநம் ஸமர்பயாமி. ஸ்ரீ காவேர்யை நம: யதாஸ்தாநம் ப்ரதிஷ்டாபயாமி. [பிராம்மண ஸுவாஸிநீ ஸமாராதனை சக்திக்கேற்றபடி செய்யவும்.]

**ஸ்ரீ காவேரி பூஜை முற்றிற்று.**

## ஸ்ரீ துலா புராணம்.

# காவேரி மஹிமை.

### முதல் அத்யாயம்.



நிசுளாபுரத்தை ஆண்டு வந்த தர்ம வர்மா எனும் ராஜரிஷி உத்தம பாகவதரான தால்ப்ய முனிவரைப் பணிந்து, ஓ பகவன்! எந்த புண்யத்தால் எல்லோரும் ஸத்புத்ரர்களைப் பெற்று சுகமாகவும் தீர்காயுஸ் உள்ளவராகவும் இருப்பர்? எதனல் பாபம் அகலும்? பகவானிடத்தில் எப்படி பக்தி உண்டாகும்? எதனல் பகவான் ஸந்தோஷமடைந்து போக மோக்ஷங்களைத் தருவார்? அதிகமாக பாபமும் துராசாரமும் நிறைந்த கலியுகத்தில் மகாபாபிகளது பாபங்களும் எதனல் அகலும்? தங்களது சிஷ்யனை எனக்கு இவைகளைப் பற்றி கூறவேண்டுமென பிரார்த்தித்தார்.

பரம தர்மிஷ்டரான அரசனைப்பார்த்து பிராம்மணேத்தமரான தால்பியர் கூறினர். அரசே! நீ மகாபாக்யசாலி! நன்ருகக்கேட்டாய். நீ இந்தகேள்விகளால் பகவானுடைய சுபமான சரித்ரத்தைக் கேட்க விரும்புகிருய்! உனக்கு ஸகல தத்துவங்களையும் கூறுகிறேன் கேள். இதே விஷயம் முன்னர் குரு க்ஷேத்ரத்தில் அரிச்சந்த்ரனல் கேட்கப் பட்டது. பகவான் அகஸ்த்யர் மஹர்ஷிகளின் முன்னிலையில் கூறினர். அதை நான் கூறுகிறேன். ஊக்கத்துடன் கேள்: முன்னே அயோத்யையை ஆண்டுவந்த அரிச்சந்த்ரன் என்ற அரசன் மிக ப்ரஸித்தனுக இருந்தான். சுப க்ஷேத்ரமான குரு க்ஷேத்ரத்தில் ஒரு யாகம் செய்யவேண்டுமென்று அங்கு வந்தான்.

ஆங்குள்ள மகாபாக்யவான்களான சௌனகர் முதலிய மஹர்ஷிகளை விநயத்துடன் நமஸ்காரம் செய்தான். வேந்தே! வருக! தர்மம் தவராமல் குடிகளைக் காக்கின்ருயா? ராஜ்யம் பொக்ஷம் ஸேனை முதலியன புஷ்டியாக இருக்கின்றனவா? பகைவர்களை எல்லாம் வென்று

வெற்றி பெற்றாயா ! பூமியில் ஆறில் ஒரு பங்கு குடிக ளிடம் வரியாக பெறுகிறாயா? குடிகளை நன்கு ரக்ஷிக்கா விடில் பிரும்ம கல்பம் வரை நரகங்களை அனுபவிக்க வேண்டும். இந்த்ரியங்களை அடக்கி நற்கீர்த்தி பெற்றால் நீண்ட ஆயுளைப் பெறுவாய். நீ பிராம்மண பக்தன். தான ஸீலன். நற்கீர்த்தி பெற்றவர்களில் மிகச்சிறந்தவன். தன்னடக்கமுள்ளவன். பெரியோர்களால் கொண்டாடத் தக்கவன். என்று அரசனைக் கொண்டாடி முனிவர் அவ ருக்கு விருந்தளித்தனர். முனிவர் உத்திரவுபடி ஆஸனத் திலமர்ந்து விநயத்துடன் கூறினான். மஹாரிஷிகளே! உங் களது ஆசிர்வாதத்தால் எல்லாம் ஸுகம். தங்களைத் தர்சித்ததால் கிருதார்த்தன் ஆனேன். பவித்ரமானேன். உலகத்தவரால் பூஜிக்கத் தக்க தபோராசிகளான உங் களைத் தர்சித்ததால் அநுக்ரஹம் பெற்றேன். தாங்கள் இங்கிருப்பதைக் கேட்டு தங்களிடம் சில விஷயங்களை விக்ஞாபனம் செய்துக் கொள்ளலாமென வந்தேன்.

எதனால் தாண்ட முடியாத ஸம்ஸாரக்கடலைத் தாண்ட லாம்? எதனால் புக்தியும் முக்தியும் உண்டாகும்? வம்சம் விருத்தியாகவும் நீண்டகாலம் வாழவும் என்ன செய்ய வேண்டும்? புருஷோத்தமனை பகவான் எதனால் ஸந் தோஷமடைவார்? ஸாரமான தத்துவம் இதுதான் என நிச்சயம் செய்து கூறுங்கள் என்றான். அரசே! உனது புத்தி எப்போதும் தர்மத்திலேயே செல்கிறது. நன்றாகக் கேட்டாய். அச்வமேதமெனும் மஹாயாகம் பகவானுக்கு பரம ஸந்தோஷத்தை உண்டுபண்ணும். பிரும்மஹத்தி யாதி பாபங்களை அகற்றி புக்தி முக்திகளைத் தரும் என் றனர். ஆனால் தாங்களே எனக்கு அந்த வேள்வியைச் செய்துவையுங்கள் எனவேண்டினான் அரசன். இந்தஸம யத்தில் நைமிஸாரண்யத்தில் உள்ள முனிவர்கள் ஸூத புராணிகரை முன்னிட்டுக்கொண்டு அங்கு வந்தனர்.

வஸிஷ்டர் வாமதேவர் ஜாபாலி காச்யபர் பிருகு வீதிஹோத்ரர் தூர்வாஸர் அத்ரி மங்கணர் காலவர் விச் வாமித்ரர் மார்க்கண்டேயர் கண்வர் அஸிதர் யாஜர் உப யாஜர் பரத்வாஜர் கௌதமர் பைலவர் பராசரர் வியா ஸர் சாதாதபர் முக்தர் மௌத்கலர் கவஷர் வால்மீகி ஜாதுகர்ணர் ஸுதீக்ஷ்ணர் அகஸ்த்யர் சதாநந்தர் ஸத்ய விருதர் மதங்கர் ஸத்ய தபஸ் ஆஸுரி நாரதர் காளிந் தர் மாண்டவ்யர் கவி மதுஹாஸ்ரயர் தௌம்யர் ஹோதா

தூமகேது ஜலப்லவர் சங்கர் லிகிதர் போதாயனர் யக்ஞகேது யாக்ஞவல்க்யர் மருக்ரது புலஸ்த்யர் புலஹர் கௌரர் ஆச்வலாயனர் ஆபஸ்தம்பர் யக்ஞராசி மரீசி பப்ரு.

இதுபோன்ற மற்றும் பலரிஷிகள் சிஷ்ய ப்ரசிஷ்யர்களுடன் வந்தனர். அவர்க்ள் மிகச்சாந்தர்கள். ஜிதேந்திரியர், சிலர் நீரையே ஆஹாரமாகக் கொண்டவர். சிலர் வாயுவையே பக்ஷிப்பவர்! சிலர் இலை கிழங்கு பழம் இவைகளை மாத்ரம் புஜிப்பவர்கள். சிலர் கிருஹஸ்தர், சிலர் துறவிகள். சிலர் வாநப்ரஸ்தர். லோகத்திற்கு அநுக்ரஹம் செய்யும் இவர்கள் தர்க்கம் வேதாந்தம் வேதம் முதலியவைகளை ப்ரசாரம் செய்பவர். ஸ்ரீ விஷ்ணுபக்தர்கள். ஸகல பாபங்களையும் அகற்றவல்லவர். பகவானுக்குப் பிரியமான துலா காவேரீ மஹிமையைக் கேட்க பகவானுக்குப் பிரியமான குரு க்ஷேத்ரம் வந்தனர். அவர்களைக் கண்டவுடன் குருக்ஷேத்ர வாஸிகளான மஹர்ஷிகள் மிக ஸந்தோஷத்துடன் வரவேற்றனர். அர்க்ய பாத்ய ஆசமனீயம் அளித்தனர். உலகத்தவர் பாபத்தை யகற்ற வல்லவர்களுமான லோக பூஜ்யர்களுமான முனிவர்களைச் சிறந்த முறையில் பூஜித்தனர். ஆஸநத்தில் அமர்த்தி புலகாங்கிதர்களாக க்ஷேமம் விசாரித்தனர்.

அரிச்சந்த்ரன் ஆநந்தக்கண்ணீர் பெருக அஞ்ஜலியுடன் அவர்கள் திருவடிகளில் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து கூறினன். முனிவர்களே! இன்றே என் பிறவியும் குலமும் விரதமும் ஸபலமாயிற்று. எனது பித்ருக்கள் ஸந்தோஷமடைந்தனர். நான் அர்ச்சித்த அச்யுதனும் ப்ரஸந்நமானர். ராஜ்யம் செல்வம் போகபாக்யம் இவைகளில் மயங்கியவனும் தர்மத்திலே பூர்ணமாக ஈடுபடாதவனுமான மூர்க்கனுக்கு உங்கள் தர்சநம் கிடைத்ததே! முற்பிறவியில் செய்த புண்யத்தால் உங்கள் தர்சநம் கிடைத்தது. இதற்கு பின் மூவ்வுலகிலும் கிடைக்கத்தகாதது ஒன்றுமில்லை என்றான். இதைக்கேட்ட முனிவர் சிறந்த விஷ்ணு பக்தனும் வஸிஷ்டர் சிஷ்யனுமான நீ எங்களை உபசரிப்பது ஆச்சர்யமல்ல. இதில் உட்காரென ஆஸனமளித்தனர். அரசனமர்ந்தபின் ஸகல ரிஷிகளையும் பார்த்து சௌநகர் கூறினர்.

